பிஸ்மில்லாஹி.



# அஹ்காமுல் முஸ்லிமீன் ஹனபீ.

இஃது

மதராஸ் திருவல்லிக்கேணி,

மொ. அ. ஷாஹுல் ஹமீது லெப்பை
அவர்களால்

முக்தஸறுக, ஹனபீ மதுஹபுக்கு அவசியமான
ஹுக்முகளை சேகரித்து அறபுத் தமிழில்
அச்சிட்டு வழங்கி வந்ததை

தமிழ் தெரிந்த நன்பர்களுக்கென்று தமிழ் படுத்தி

தனது

ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



1925 [விலை அணா 10

...செய்யப்பட்டது



பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.





# அஹ்க்காமுல் முஸ்லிமீன்

# ஹ ன பி ய் ய ா.

## அவ்வல் கலிமாத் தையிபு.

லாயிலாஹ இல்லல்லாஹு - வணக்கத்திற்குப் பாத்திரவான் யாருமில்லை அல்லாஹுத் தஆலாவைத் தவிர, முஹம்மதுர் றசூலுல்லாஹி - முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமவர்கள் அல்லாஹுத் தஆலாவுடைய திருத்தூதரா யிருக்கும்.

## இரண்டாங் கலிமா ஷஹாதத்து.

அஷ்ஹது - பிசகற வறிந்து விண்ணப்பஞ் செய்கிறேன், அன் லாஇலாஹ இல்லல்லாஹு - உண்மையாக வணக்கத்திற்கு பாத்திரவான் யாருமில்லை அல்லாஹுத் தஆலாவைத் தவிர, வஹ்தஹு - அவன் தனியவன், லாஷரீக்கலஹு - அவனுக்கு யாதொரு இணைபுமில்லை, வஅஷ்ஹது - இன்னும் பிசகற வறிந்து விண்ணப்பஞ் செய்கிறேன், அன்னமுஹம்மதன் - உண்மையாக முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமாகிறவர்கள், அப்துஹு - அவனுடைய உரிய அடியாருமாய், வறசூலுஹு - அவனுடைய திருத்தூதாங் கருமா யிருக்கும்.

## மூன்றுங் கலிமா தம்ஜீது.

சுப்ஹானல்லாஹி - அல்லாஹுத் தஆலாவைத் துய்தாக்கிற தாகத் துய்தாக்கிறேன், வல்ஹம்து லில்லாஹி - எல்லாப் புகழும் அல்லாஹுத்தஆலாவுக்காயிருக்கும், வலாஇலாஹ இல்லல்லாஹு - வணக்கத்திற்குப் பாத்திரவான் யாருமில்லை அல்லாஹுத் தஆலாவைத் தவிர, வல்லாஹு அக்பர் - அல்லாஹுத் [illegible]லா மிகவும்

பெரியவன், வலாஹவ்ல, யாதொரு பாவத்தை விட்டுந் திரும்புதலு-மில்லை, வலாக் குவ்வத்த - யாதொரு இபாதத்தின் பேரில் பெலனு மில்லை, இல்லா பில்லாஹில் அலிய்யில் அலீம்-வலுப்பமாகிய உயர்த்தியாகிய அல்லாஹுத் தஆலாவின் உதவி கொண்டொழிய.

---

## நாலாங்கலிமாத் தவ்ஹீது.

லாயிலாஹ இல்லல்லாஹு - வணக்கத்திற்குப் பாத்திரவான் யாருமில்லை அல்லாஹுத் தஆலாவைத் தவிர, வஹ்தஹு - அவன் தனித்தவன், லாஷரீக்க லஹு - அவனுக்கு யாதொரு இணையுமில்லை, லஹுல் முல்கு - அவனுக்குடையதாயிருக்கும்இராஜாங்கம், வலஹுல் ஹம்து - அவனுக்காயிருக்கும் எல்லாப் புகழும், யுஹ்யீ - மவ்த்தானவர்களை ஹயாத்தாக்குவான், வயுமீத்து -ஹயாத்தானவர்களை மவ்த்தாக்குவான், பியதிஹில் கைறு - அவன் வசமாயிருக்கும் நலவடங்கலும், வஹுவ அலாக்குல்லி ஷைஇன் கதீற் - அவனுகிறவன் வஸ்துக்களடங்கலின் பேரிலும் மிக்கத்திராணி பெற்றவன்.

---

## ஐந்தாங் கலிமா றத்துல் குப்றி.

அல்லாஹும்ம - யாஅல்லா ! இன்னீ அஊது பிக்க மின் அன் உஷ்ரிக்க பிக்க ஷைஅன் வஅனு அஃலமு - நான் அறிந்தவனுக அறவே உன்னைக்கொண்டு பிணை வைக்கிறதை விட்டும்உண்மையாக உன்னைக்கொண்டு காவல்பாடு தேடுகிறேன் வஅஸ்தக்பிறுக்க லிமாலா அஃலமு - நான் அறியாமல் செய்த பாவத்துக்கு உன்னிடத்தில் பிழைபொறுக்கத் தேடுகிறேன். இன்னக்க அன்த்தல் அல்லாமுல் குயூப் - உண்மையாக நீ யாகிறவன் இரகசியங்களை மிகவு மறிந்தவன், துப்த்து அன்ஹு - உன்னைக்கொண்டு பிணைவைக்குதலென்னும் ஷிறுக்கை விட்டும் தவ்பாச்செய்து மீண்டேன். வத்தபர்றஃத்து அன்குல்லி தீனின் ஸிவா தீனில்யிஸ்லாம் - தீனுல் இஸ்லாமைத் தவிர மற்றும் மார்க்கமடங்கலை விட்டும் நீங்கி விட்டேன். வஅஸ்லம்து லஅகூலு லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் றசூலுல்லாஹி - யஃனீ லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் றசூலுல்லாஹி'' என்று சொன்னவனுக இஸ்லாமாகி விட்டேன். இதை அந்தியுஞ் சந்தியுமோதுகிறது குப்றை விட்டும் நீங்குவதற்கு ஸபபாயிருக்கும்.

---

## முதலாவது பிள்ளைகளுக்கு படித்துக் கொடுப்பது.

தமீஸுள்ள (யஃனீ) தன்னாலே தின்னக் குடிக்க மலஞ் ஜலத்துக் கிருந்தால் தன்னாலே துப்புரவு செய்ய விபரமறிந்த பிள்ளைகளுக்கு "எங்கள் நபினார் முஹம்மது நபீ, மக்காவில் பிறந்து அவ்விடத்தில் கல்குகளளவில் நபியாகவும் றசூலாகவு மனுப்பப்பட்டு மதீனத்துக்கு ஹிஜ்ரப்போய் அவ்விடத்தில் வபாத்தாகி யடக்கப்பட்டார்கள். அவர்கள் சிவப்பைக் கொண்டு கலக்கப்பட்ட வெண்மையானவர்கள். மனிதர்களுக்கெல்லாம் படை சோலத்தாலும், நடத்தையாலும், குணத்தாலும் நிறப்பமானவர்கள். வமிசம் குறைவியாணவர்கள். அவர்கள் தாயார் பேர் ஆமினு உம்மா தகப்பனார் பேர் அப்துல்லா பாட்டனார்பேர் அப்துல் முத்தலிபு பூட்டனார் பேர் ஹாஷிம் முப்பாட்டனார் பேர் அப்துல் முனப்" என்று படித்துக் கொடுக்க வேண்டும்.

---

## பிள்ளைகள் மீது தாய் தந்தைகளுக்கு வாஜிபாகுங் கருமங்கள்.

பிள்ளைகளுக்கு சிறுவயதிலேயே குறுஆன் ஷரீபு, ஈமான், இஸ்லாம் முதலிய தீனுடைய இல்முகளைக் கற்பிக்கிறதும் தொழுகை, நோன்பு முதலிய இபாதத்துகளைக் கொண்டேவுகிறதும் தாய் தகப்பன் முதலிய சவரட்சணைக்காரர்கள் பேரில் வாஜிபாயிருக்கும்.

---

## இல்மை படிக்கிறது ஆண் பெண் அடங்கல் பேரிலும் விதியாகிறது.

அல்லாஹுத் தஆலா குறுஆன் ஷரீபில் திருவுளம் பற்றினான்:— வயறுபஉல்லாஹுல்லதீன ஆமனூ மின்கும் வல்லதீன ஊத்துல் இல்ம தறஜாத்தின் - (யஃனீ) "உங்களில் ஈமான் கொண்டார்களே அவர்களுடைய தறஜாவை நான் உயர்த்தியாக்கி வைப்பேன் இன்னும் அந்த முஃமினான ஜனங்களில் இல்மைக் கொடுக்கப் பட்டுதே அவர்களுடைய தறஜாவை மிகவு முயர்த்தியாக்கி வைப்பேன்" என்று.

---

## ஹ தீ து.

இல்மைப் படிக்கிறது முஸ்லிமான ஆண் பெண் அடங்கலின் பேரிலுங் கடமையாயிருக்கும். (எஃனீ) ஒரு மனிதன் ஆக்கில் பாலிகாய் விட்டால் அவனுக்கு முக்கியமாகிய பிக்ஹுடைய இல்மை

படிக்கிறதும், தொழுகைக்குப் போதுமான மட்டிலும் குறுஆனைப் படிக்கிறதும் பறுலா யிருக்கும்.

இன்னுமொருவன் இல்மைப் படிக்க நாடி காலில் மிதியடிபோடு வானாயின் அவன் காலடி யெடுத்து வைப்பதற்கு முன் அல்லாஹுத் தஆலா அவன் முன் செய்த பாவங்களடங்கலையும் பொறுப்பான். இன்னும் அல்லாஹுத் தஆலா குறுஆன் ஷரீபில் திருவுளம் பற்றினான்.

அதாவது;—பஸ்அலூ அஹ்லஸ்ஸிக்ரி இன்குத்தும் லாத்தஃலமூன் - (யஃனீ) "ஓ மனிதர்களே! நீங்கள் அறியாதவர்களாயிருப்பீர்களாகில் அறிந்தவர்களிடத்தில் படித்துக் கொள்ளுங்கள்" என்று ஆகையால், இதனை அறியாதவர்கள் அறிந்தவர்களிடம் கேட்டுப் படிப்பது வாஜிபென்று அறியலாயிற்று.

---

## தீனுடைய இல்முகள் மூன்று வகைப்படும்.

இல்முகள் அநேகமுண்டு அதில் முக்கியமாய் கற்றுக் கொள்ள வேண்டியவை தீனுடைய இல்மா யிருக்கும். ஆகையால், அதில் மூன்று வகையுண்டு. முதலாவது:—பிக்ஹுடைய இல்மு அதாவது எவையின்னது, விலகலின்னது, பறுலின்னது, வாஜிபின்னது, ஹலாலின்னது, ஹறாமின்னதென்று விளங்கியறிகிற தாயிருக்கும். இரண்டாவது;—குறுஆன் ஷரீபுடைய மஃனா அதன் தப்ஸீறுடைய பயானை யறிகிறதா யிருக்கும். மூன்றாவது;— நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுடைய ஹதீது ஷரீபுகளை யறிகிறதாயிருக்கும். மவ்லானா ஷாமீஜலாலுத்தீன் றஹ்மஹுல்லா சொல்கிறார்கள்; "இந்த மூன்று இல்மையு மறிந்தவர்கள் தீனுடைய உலமாக்களா யிருக்கும்" என்று.

---

## ஷறஹுடைய ஹுக்முகளில் ஆகுமானவைகள் ஐந்து.

முதலாவது;—பறுலு, அதாவது குறுஆன் ஹதீது யிவைகளின் அத்தாக்ஷியால் ஏவல் தரிபட்ட செய்கை அதைச்செய்தால் ஸவாபு கிடைக்கும். உஸ்றன்றி விட்டால் பெரும்பாவம், அதிக வேதனை கொடுக்கப்படும். எல்லா இமாம்களும் ஒத்துமையான பறுலை அல்லத்தட்டினவன் காபிறுவான். நஊது பில்லாஹி மின்ஹா.

இரண்டாவது;—வாஜிபு. அதாவது பல அருத்தங் கொள்ளும்படியான அத்தாக்ஷியால் ஏவல் தரிபட்ட செய்கை, அதைச் செய்கிறதால் ஸவாபிலும், விடுகிறதால் அதாபிலும் பறுலைப்போல

யிருக்கும். அதை அல்லத் கட்டினவன் காபிருக மாட்டான். என்கிலும் பெரும்பாவி யாவான்.

மூன்றுவது;—ஸுன்னத்து. அதாவது, நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமவர்கள் ஒரு விடுத்தம் இரண்டு விடுத்தம் விட்டு மற்ற நேரங்களிலெல்லாம் நடத்தி வந்த செய்கை. அதைச்செய்தால் ஸவாபு. உஸ்ரில்லாமல் வழமையாக விட்டால் அந்த இரண்டுக்கும் தணிந்த அதாபு. "என்னுடைய சுன்னத்தை விட்டவன் என் ஷபாஅத்தை பெற்றுக் கொள்ள மாட்டான்." என்று ஹதீதில் வந்திருக்கிறது.

நான்காவது;—முஸ்தஹப்பு அதாவது, நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமவர்கள் ஒரு விடுத்தம் இரண்டு விடுத்தம் செய்து மற்ற நேரம் விட்டு வந்த செய்கை. அதைச் செய்தால் தவாபுண்டு விட்டால் அதாபில்லை.

ஐந்தாவது;—முபாஹு. அதாவது, செய்கிறதும் விடுகிறதும் சம்மதங் கொடுக்கப்பட்ட செய்கை. அதைச் செய்தால் ஸவாபுமில்லை விட்டால் அதாபுமில்லை.

---

## ஷரஹுடைய ஹுக்முகளில் ஆகாதவை மூன்று

முதலாவது;—ஹறாம். அதாவது, பலவந்தமாகிய பல அர்த்தங் கொள்ளாத அத்தாக்ஷியால் விலக்குவதும் கொஞ்சமேனும் ஆகும் என்கிற அத்தாக்ஷி அதில் நின்றிடாமல் யிருக்குமே, அப்படிக் கொற்ற செய்கை. அதைச் செய்தால் பெரிய அதாபும் விட்டால் ஸவாபும் கிடைக்கும். எல்லா இமாம்களும் ஹறாமென்கிறதில் ஒத்துமையானதை ஆகுமென்று சொன்னவன் காபிருகி விடுவான். நஊதுபில்லாஹி மின்ஹா.

இரண்டாவது;—மக்றூஹ் அதாவது, வேறொரு தலீல் ஆகுமென்கிறது தரிபட்டிருக்கிறதுடன் விலக்கென்பது பலவந்தமான அத்தாக்ஷியால் தரிப்பட்ட செய்கை. அதைச் செய்தால் வேதனையும் விட்டால் ஸவாபுங் கிடைக்கும், ஆகுமென்று சொன்னால் காபிருகான் ஆனால். மக்றூஹி லிரண்டு வகையுண்டு. அதாவது, மக்றூஹுத் தஹ்ரீமென்றும், மக்றூஹுத் தன்ஸீஹென்றுஞ் சொல்லப்படும் மக்றூஹுத்தஹ்ரீமாகிறது; ஹறாமுக்குச் சமீபமானது மக்றூஹுத் தன்ஸீஹானது; ஹலாலுக்குச் சமீபமானது.

மூன்றாவது;—முப்ஸிது. அதாவது; செய்த அமலை முறிக்கும்படியான செய்கை. அந்த முப்ஸிதான செய்கையை மனமுரண்டாகச் செய்தால் வேதனை. மறதியாகச் செய்தால் வேதனையில்லை.

---

## பறுலு இரண்டு வகைப்படும்.

முதலாவது;—பறுலு ஐன். அதாவது அல்லாவைக் கொண்டு ஈமான்கொள்வது, தொழுகை, ஸகாத்து, நோன்பு, ஹஜ்ஜு—இவைகளைப்போல் ஒவ்வொருவரடங்கலின் பேரிலும் தனித்தனியே விதிக்கும். ஒருவர் செய்கிறதைக் கொண்டு மற்றவர்களை விட்டும் விழமாட்டாது.

இரண்டாவது;—பறுலுக் கிபாயா. அதாவது மய்யித்துத் தொழுகை, குறுஆனை ஹிப்லு செய்கிறதுபோல் மொத்தமாக எல்லார் பேரிலும் விதிக்கும். சிலர் செய்தால் எல்லாரை விட்டும் விழுந்துபோம். ஒருவருஞ் செய்யாவிட்டால் எல்லாரும் பாவியாவார்கள். இனி பறுலு ஐனுகிறது, பறுலுக் கிபாயாவைக் காண ஏற்றம். பறுலு கிபாயாவோ வாஜிபைக்காண ஏற்றம். வாஜிபோ சுன்னத்து முஅக்கதாவைக்காண ஏற்றம்.

## தீனுடைய பாவனைப்பற்றிப் பேசுவது.

அல்லாஹுத் தஆலா குறுஆன் ஷரீபில் திருவுளம் பற்றினன் **இன்னத்தீன இன்த்தல்லாஹில் இஸ்லாம்,**—"திட்டமாக தீனென்பது இஸ்லாமென்னும் வழிப்பாடாயிருக்கும்" என்று. ஆனல் தீனெனுஞ் சொல்லுக்கு முப்பொருளுண்டு (முதலாவது;) வழிப்பாடு (இரண்டாவது;) வழக்கம் (மூன்றாவது,) கூலி, ஆக முப்பொருளையும் பொதிந்தது தான் தீனென்னும் மார்க்கமாயினதாம் இன்னும் **இன்னல்லாஹஸ்த்தபா லக்குமுத்தீன பலாத்தமூத்துன்ன இல்லா வஅன்த்தும் முஸ்லிமூன்,**—"திட்டமாக அல்லாஹுத்தஆலா உங்களுக்கு தீனுல் இஸ்லாமைத் தெரிந்து தந்தான். ஆனதால், முஸ்லிமானவர்களல்லா திருக்கிறஹாலில் மாணிக்கவேண்டாம்" என்று ஆகையால், அல்லாஹுத் தஆலா நம் அனைவர்கள் பேரிலும்கிருபையென்னும் றஹ்மத்தைப் பொருந்தி தீனுல் இஸ்லாமென்னும் செவ்வொத்த மார்க்கத்தின் பேரில் தரிபடுத்தி நல்லுதவி புரிவானுகவும்.,

## தீனென்னும் எடுப்புக்கு தூண்கள் நான்கு.

தீனெனு மெடுப்புக்கு நான்கு றுக்னுகளெனும் தூண்களுண்டு. முதலாவது;—ஈமானென்னும் உண்மை கொள்ளுதல். இரண்டா

வது;—வழிப்பாடென்னும் இஸ்லாம். மூன்ருவது;—ஓர்மைப் படுத்துதலென்னும் தவ்ஹீது, நான்காவது;—அல்லாஹுத் தஆலாவை யறியுதலென்னும் மஃரிபா இந்த நாலுங் கூடித்தான் தீனென்ருயின. ஆகையால், யாராகிலு மொருவன் இந்த நாலிலொன்றைப் பேதலிக்கின் அவனுடைய தீன் பேதகமாய் விடும்.

---

## பாபுன் பீபயானுல் ஈமான்.

ஈமானுடைய பயானைப்பேசும் பாடம் ஈமானுகிறது, **தஸ்தீகுன் பில்கல்பி வஇக்ருரன் பில்லிஸான்** "அல்லாஹுத் தஆலாவையும் அவனுடைய றசூலேயும் யிருதயத்தால் உண்மை கொள்கிறதும், அப்பிரகாரம் நாவால்விண்ணப்பஞ் செய்கிறதுமாயிருக்கும் ஈமானுடைய சிபத்தாகிறது முஜ்மலெனும் விவரிக்கப்படாத ஈமானென்றும், முபஸ்ஸலெனும் விவரிக்கப்பட்ட ஈமானென்று மிரண்டுவகைப்படும்.

---

## முஜ்மலாகிய விவரிக்கப்படாத ஈமானுகிறது.

**லாயிலாஹ யில்லல்லாஹு முஹம்மதுர் றசூலுல்லாஹி** - எஃனீ வணக்கத்திற்குப் பாத்திரவான் யாருமில்லை அல்லாஹுத் தஆலாவைத் தவிர முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமாகிறவர்கள் அல்லாஹுத் தஆலாவுடைய திருத்தூதராயிருக்குமென்பதாம்.

---

## முபஸ்ஸலாகிய விவரிக்கப்பட்ட ஈமானுகிறது.

**ஆமன்த்துபில்லாஹி** - அல்லாஹுத் தஆலாவைக்கொண்டு ஈமான் கொண்டேன், **வமலாயிக்கத்திஹி** - அவனுடைய மலக்குகளைக்கொண்டு மீமான் கொண்டேன், **வக்குத்பிஹி** - அவனுடைய வேதங்களைக்கொண்டு மீமான்கொண்டேன், **வறுசுலிஹி** - அவனுடைய நபிமார் றசூல்மா ரடங்கலைக்கொண்டு மீமான்கொண்டேன், **வல்யவ்மில் ஆகிரி** - ஒடுக்கத்து நாளைக்கொண்டு மீமான்கொண்டேன், **வல்கத்ரி கைரிஹிவஷர்ரிஹி மினல்லாஹித் தஆலா** - அல்லாஹுத் தஆலாவில் நின்றும் நல்லாகிய கட்டளைகள் தீங்காகிய கட்டளைகளடங்கலைக்கொண்டும் ஈமான் கொண்டேன் என்பதாம். இக்கலிமாக்களிற் சொல்லப்பட்டிருக்கிற ஆறுகாரியங்களும் ஈமானுடைய ஷறுத்துகளாயிருக்கும்.

---

## ஈமானில் முந்தின ஷறுத்து.

ஈமானில் முந்தினாஷறுத்தாகிறது அல்லாஹுத் தஆலாவைக்கொண்டு ஈமான்கொள்கிறது. அதில் அல்லாஹுத் தஆலாவுக்கு (வாஜிபாவாகிய) தரிபாடாகிய, ஸிபாத்துகள் இருபதையும் அதற்கு மாற்றமாகிய முஸ்தஹீலத்தான ஸிபாத்துகள் இருப

தையும் இந்த இருவகை ஸிபாத்துகளையும் தவிர ஜாயிஸான ஸிபாத்துகளையும் அறிந்து ஈமான்கொள்கிறது.

---

## அல்லாஹுத் தஆலாவுக்கு வாஜிபாகிய ஸிபாத்து இருபதுக்கும் விபரம்,

அல்லாஹுத் தஆலா ஒருவன். அவனுடைய உள்ளமைகளிலும், வர்ணிப்புகளிலும், திருநாமங்களிலும், சொல்களிலும் இணைதுணையில்லையென்றும் அவனுக்குத் தரிபாடான ஸிபாத்துகளிருபது அவையாவன:—**உஜூதுன்** - உள்ளமை, **கதீமுன்** - பூர்விகம் **பகா** - என்றைக்குந் தரிபாடு, **முகாலபத்துன் லில்ஹவாதிஸி** - புதியதுகளுக்கு ஒவ்வா வண்ணமா யிருக்கிறது. **கியாமுஹு பினப்ஸிஹீ** - அவன் தன்னைக்கொண்டு நிலைபாடாயிருக்கிறது. **வஹ்தானிய்யத்து** - அவன் ஒருவனென்கிறது. **ஹயாத்து** - ஜீவன் **இல்மு** - அறிவு, **இருதத்து** - நாட்டம், **குத்றத்து** - தத்துவம், **ஸம்வு** - கேள்வி, **பஸறு** - பார்வை, **கலாம்** - பேச்சு, **ஹையுன்** - உடலன்றியே ஜீவனுடையான், **ஆலிமுன்** - கல்பன்றியே அறிவுடையான், **முரீதுன்** - நப்ஸன்றியே நாட்டமுடையான்; **காதிறுன்** - ஆதாரமன்றியே தத்துவமுடையான், **ஸமீஉன்**-காதன்றியே கேள்வியுடையான், **பஸீறுன்** - கண்ணன்றியேபார்வையுடையான், **முதக்கல்லிமுன்**-நாவன்றியே பேச்சுடையான், ஆக ஸிபாத்துகள் இவ்விருபதுமா யிருக்கும்.

---

## வாஜிபுக்கு மாற்றமாகிய முஸ்தஹீலத்தான ஸிபாத்துகள் இருபதுக்கும் விபரம்.

இந்த முஸ்தஹீலத்தான ஸிபாத்துகளவனுக்கு அறவே கிடையாது அவையாவன:-**அதமுன்** - இல்லாமை, **ஹுதூஸுன்** - புதியது, **பனு** - அழிவு, **முமாதலத் துன்லில் ஹவாதிஸி** - புதிதான படைப்புகளுக்கு ஒப்பாகிறது. **அல்இஹ்தியாஜு இலாமுஹில்லின் அவ்முகஸ்ஸிஸின்** - யாதொரு தானத்தளவில் அல்லது முகஸ்ஸிஸளவில் ஹாஜத்தாகிறது, **அல்லத்தஅத்து** - தாத்திலும், ஸிபாத்திலும், அப்ஆலிலும் எண்ண முண்டாயிருக்கிறது. **அஜ்ஸுன்** - ஏலாமை, **இக்றுஹுன்** - நாடாமலிருக்கிறது, **ஜஹ்லுன்** - அறியாமை, **மவ்த்துன்** - சாவு, **ஸமமுன்** - செவிடு, **அமா** - குருடு, **பக்கமுன்** - ஊமை, **கவ்னுஹு ஆஜிஸன்** - ஏலாதவனாயிருக்கிறது, **மக்றூஹன்** - நாடாதவனாயிருக்கிறது. **ஜாஹிலன்** - அறியாதவனாயிருக்கிறது. **மையித்தன்** - மவ்த்தானவனாயிருக்கிறது, **அஸம்முன்** - செவிடனாயிருக்கிறது, **அஃமா** - குருடனாயிருக்கிறது, **அப்**

கூ-ஊமையனாயிருக்கிறது, ஆக இந்த இருபதிலொன்றையாவது அவனுக்கு உண்டெனச் சொன்னால் காபிராவான். நஊதுபில்லாஹி மின்ஹா.-

## ஜாயிஸான ஸிபாத்துகள்.

முன் சொன்ன இருவகை ஸிபாத்துகளையுந் தவிர மற்ற ஸிபாத்துகளாவது, ஜாயிஸான ஸிபாத்தாயிருக்கும். இஃது அவனுக்கு உண்டாயிருக்குதலு மில்லாதிருக்குதலும் ஆமாயிருக்கும். அதாவது, **பிஃலுகுல்லி மும்கினின் அவ்த்தற்குஹூ** - இடம் பாடான தடங்கலையுஞ் செய்கிறது, அல்லது விடுகிறது. அவையாவது, **கஸ்ஸவாபிலில் முதீஇ** - வழிப்பட்டவனுக்கு ஸ்வாபு கொடுக்கிறது, **வல்யிகாபி லில் ஆஸீ** - மாறுசெய்தவனை வேதனை செய்கிறது, **வருஃயத்தில் கல்கிலஹூ அஸ்ஸவஜல்ல பில்ஆகிறத்தி** - ஆகிறத்திலவனை கல்குகள் காண்கிறது, **வல்இஸ்ஆதி** - சீதேவியாக்கிறது, **வல்இஷ்காயி** - மூதேவியாக்கிறது, **வல்இஃதாயி** - கொடுக்கிறது, **வல்ஹிற்மானி** - கொடுக்காமலிருக்கிறது, இவைகளைப்போலாம். ஆனபோதே, இவைகளிலொன்றையாவது அல்லாஹுத் தஆலா செய்வது அல்லது விடுவது அவனுக்கு வாஜிபாகாது. இன்னுமவனுக்கு மாதா, பிதா, மனைவி, மக்கள் சுற்றமில்லையென்றும், ஊண், குடிப்பு, உறக்கம், மறதி, அழுகை, சிரிப்பு, நகல், சுவாத்தியம், பலநிறம், பலகுணம், நிகளம், அகலம், கட்டை, நெட்டை, ஆண், பெண், இவைபோலுள்ள மட்டுதிட்டங்கள் அடங்கலைவிட்டும் தாய்மையானவனென்றறிந்து ஈமான் கொள்கிறது.

## ஜாயிஸான ஸிபாத்துகளில் ஷாபியீ மத்ஹபுக்கும் ஹனபீ மத்ஹபுக்குமுள்ள கிலாபுகள்.

ஜாயிஸாகிய ஸிபத்தில் **அஷ்அரிய்யா** வென்னும் ஷாபியீ மத்ஹபையுடையவர்களுக்கும், **மாத்துரீதிய்யா** வென்னும் ஹனபீ மத்ஹபையுடையவர்களுக்கும் கிலாபுண்டாயிருக்கிறது. அதன் விவரமாவது; ஹனபீ மத்ஹபின்படி ஹயாத்து, இல்மு, இருதத்து, குத்றத்து, ஸம்உ, பஸறுன், கலாமு இந்த மஆனிய்யான எழு ஸிபாத்துகளுடன் தக்வீன் என்னும் ஸிபத்தையுஞ் சேர்த்து எட்டு ஸிபத்துகளும் வாஜிபாயிருக்கும். தக்வீனாகிறது இல்லாத வஸ்துவை யில்லாமையில் நின்றும் உண்டென்கிறதளவில் வெளிப்படுத்தி வைக்குதலென்னும் உண்டாக்கிவைக்குதல், அழிக்குதல், படைக்குதல், ரூறக்தாக்குதல் ஹயாத்தாக்குதல், மவ்தாக்குதல், இரணங்கொடுக்குதல், நேர்வழிகாட்டுதல், வழிகேடாக்குதல் இதுபோலொத்த செயலோடுங்கூடிய ஸிபத்துகளடங்கலும் தக்வீன் என்னும் ஸிபத்தளவில் மீளுகிறதாம். ஷாபியீ மத்ஹபின்படி செயலோடுங்கூடிய ஸிபத்துக

ளெல்லாம் குத்றத்தென்னும் ஸிபத்தளவில் மீளுகிறதாயிருக்கும். ஆனதால், தக்வீன் என்னும் ஸிபத்து வாஜிபில்லை. ஆனபோதே, செயல்களை வெளியாக்குதலும் வெளியாக்காதிருக்குதலும் இரண்டு மத்ஹபின்படிக்கும் ஜாயிஸாம். கிலாபாகிறதெல்லாம் தக்வீனெனும் ஒரு ஸிபத்துண்டென்றும், அதளவிற்றான் செயல்களெல்லாம் மீளுகிறதென்றும், தக்வீனெனும் ஸிபத்தில்லையென்றும், குத்றத்தெனும் ஸிபத்தளவிற்றான் செயல்களெல்லாம் மீளுகிறதென்றும் விபரிக்கிறதிலாயிருக்கும்.

## ஈமானுடைய இரண்டாவது ஷறுத்து.

ஈமானுடைய இரண்டாவது ஷறுத்தாவது:--மலாயிக்கத்துகளைக் கொண்டு ஈமான்கொள்ளுகிறது. மலாயிக்கத்துகளடங்கலும் அல்லாஹுத் தஆலாவுடைய அடியார்கள், அவர்கள் ஒளிவினால் படைக்கப் பட்டவர்கள்; அல்லாஹுத் தஆலாவுடைய ஏவலுக்கு மாறுசெய்யார்கள், அவன் ஏவப்பட்டதைச் செய்வார்கள், அவர்களுடைய சுபாவம் வழிபாடாயிருக்கும், அவர்கள் ஆணுமில்லைப் பெண்ணுமில்லை, பேடியுமில்லை இன்னுமவர்களுக்கு தீன், குடிப்பு, மாதா, பிதா, மனைவி, மக்கள், யாதொன்றுங் கிடையாது. அவர்களுக்குச் சிறகுகளுண்டு பற்பல கோலங்கொண்டும் கோலங்கொள்ளுவதின் பேரிலும் திராணி பெற்றவர்கள் மிகுந்து அவர்களிருக்குந் தானமாகிறது வானமாகயிருக்கும். சிலர் பூமியிலுமிருப்பார்கள். அல்லாஹுத் தஆலாவைத் தொட்டும் விசளமறிவிக்கு வதிலுண்மைச்சொல்பவர்கள் அவர்களுடைய ஆலம், ஜின்னு, மனு மற்று மாலமடங்கலைக் காணவும் நிரம்ப மிகுதமாயிருக்கும். அவர்களுடைய வலுப்பத்தையு மெண்ணிக்கையையும் அல்லாஹுத் தஆலாவே யொழிய யாருமறியார்கள் ஆகிலும், அவர்களில் நாம் எட்டுப்பேர்களை விவரமாயறிவது வாஜிபாம். ஒன்றாவது; நபிமார்களளவில் வஹீகொண்டு சாட்டப்பட்ட (ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம்) இரண்டாவது; மழைகள், கடல்கள், ஆறுகள், இரணங்கள் அளக்கிறதுகொண்டும் கெர்ப்பங்களிலே பிள்ளைகளை சூறத்தாக்குகிறதுகொண்டும் சாட்டப்பட்ட (மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம்) மூன்றாவது; லவ்ஹுல் மஹ்பூலைக்கொண்டும் ஸூறூதுவது கொண்டும் சாட்டப்பட்ட (இஸ்றாபீல் அலைஹிஸ்ஸலாம்) நாலாவது; கல்குகளுடைய றூஹுகளைக் கைப்பற்றுவது கொண்டு சாட்டப்பட்ட (இஸ்றாயீல் அலைஹிஸ்ஸலாம்) ஐந்தாவது; சுவர்க்கத்திற்கு அதிபதியாகிய (றிழ்வான் அலைஹிஸ்ஸலாம்) ஆறாவது; நரகத்திற்கு

அதிபதியாகிய (மாலிக்கு அலைஹிஸ்ஸலாம்) ஏழாவது எட்டாவது; அடியார்களில் நின்று முண்டாகும் சொல்செயல் நிர்ணயங்களை ஹிப்ளு செய்துக்கொள்ளு மென்னத்தக்க (றகீபு, அதீது) என்று ஒவ்வொருவரடங்கலுக்கும் பெயர் சொல்லப்பட்ட இரண்டு மலக்குகள் இன்னும் அறுஷைச்சுமந்தவர்கள் சூழ்ந்தவர்கள் மற்றும் மலாயிக்கத்துகளடங்கலைக் கொண்டும் ஈமான் கொள்கிறது.

## ஈமானுடைய மூன்றாவது ஷறுத்து.

ஈமானுடையமூன்றாவது ஷறுத்தாவது:—வேதங்களைக்கொண்டு ஈமான்கொள்கிறது. வேதங்கள் ஸுஹ்புகளடங்கலும் அல்லாஹுத் தஆலாவில் நின்றும் அன்பியாக்கள் பேரில் இறக்கப்பட்டதாயும், அவனுடைய கலாமாயும், உண்மையானவைகளாயும், படையுனப்படாததாயும், கதீமானதுகளாயும், ஒரே கலாமானவைகளாயு மிருக்கும். அந்த வேதங்கள் ஸுஹ்புகளடங்கலையும் நம்முடைய புறுகான் வேதத்தைக்கொண்டு மாற்றப்பட்டன. புறுகான் கியாமமளவும் பாக்கியாயிருக்கும்.

இனி அல்லாஹுத் தஆலா நூறு ஸுஹ்புகளையும், நாலுவேதங்களையு மிறக்கினான். அதில், (ஆதம் அலைஹிஸ்ஸலா) முக்கு பத்து ஸுஹ்புகளையும், (ஷீது அலைஹிஸ்ஸலா) முக்கு ஐம்பது ஸுஹ்புகளையும், (இத்ரீஸ் அலைஹிஸ்ஸலா) முக்கு முப்பதுஸுஹ்புகளையும், (இப்றாஹீம் அலைஹிஸ்ஸலா) முக்கு பத்து ஸுஹ்புகளையும், இன்னும் தவறாத்து வேதத்தை அப்றானீப் பாஷையில் (மூஸா அலைஹிஸ்ஸலா) முக்கும், ஸபூர்வேதத்தை யூனானீப் பாஷையில் (தாவூது அலைஹிஸ்ஸலா) முக்கும், இன்ஜீல் வேதத்தை ஸுர்யானீப்பாஷையில் (ஈஸா அலைஹிஸ்ஸலா) முக்கும், புற்கான் வேதத்தை அறபீப்பாஷையில் நம்முடைய நாயகம் (முஹம்மது முஸ்தபா அஹ்மது முஜ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம்) அவர்களுக்கு மிறக்கினானென்று ரிவாயத்து வருகிறது.

இன்னுமொரு ரிவாயத்தில் மூஸா அலைஹிஸ்ஸலாமுக்கு தவ்றாத்து வேதத்திற்கு முன் பத்துஸுஹ்புகளை இறக்கினானென்றும் வந்திருக்கின்றது. இன்னும் ஸுஹ்புகளுடைய எண்ணிக்கையில் ரிவாயத்துகள் இகுத்திலாபாக விருக்கிறது; ஆனதால் நான்கு வேதத்தையுந்தவிர மற்றும் ஸுஹ்புகளுடைய எண்ணிக்கையைக் குறியாமல் மொத்தமாக வேதங்கள் ஸுஹ்புகளைக் கொண்டு ஈமான் கொள்ளவேணும்.

## ஈமானுடைய நான்காவது ஷறுத்து.

ஈமானுடைய நான்காவது ஷறுத்தாவது:—றசூல் மார்களைக்கொ

ண்டு ஈமான் கொள்கிறது. றசூல்மார் களடங்கலும் அல்லாஹுத் தஆலாவுடைய அடியார்கள் பாவங்களைவிட்டுங் காக்கப்பட்டவர்கள் இனியவர்களுக்கு வாஜிபாகிய ஸிபத்துகள் நாலுண்டு.

அதாவது:—**ஸித்கு** - உண்மை, **அமானத்து** - சார்மானம், **தப்லீகு** - ஏவப்பட்டதை எத்திவைக்குதல், **பதானத்து** - அக்லு கூர்மை ஆனபோதே, இதற்கு மாற்றமாகிய ஸிபாத்துகள் நாலுமவர்களுக்கு அறவேகிடையாது. முஸ்தஹீலான ஸிபாத்து அதாவது, **கிஸ்பு** - பொய், **கியானத்து** - விலக்கப்பட்ட கருமத்தைச் செய்கிறது, **கித்மான்** - ஏவப்பட்டதை மறைக்கிறது, **பிலாதத்து** - அகல் கூர்மை இழந்திருக்கிறது.

இனியவர்களுடைய மேலாம்பரமாகிய மறுத்தபாக்களைக்குறைத்தலாக்காத மனிதர் குணங்கள் அவர்களுடைய ஹக்கில் ஜாயிஸாயிருக்கும். அதாவது:—**கல்அக்லி** - ஊண், **வஷ்ஷுர்பி** - குடிப்பு, **வல்லைஇ**-விற்பனை, **வஷ்ஷுருஇ** - கொள்வினை, **வத்தஸவ்வுஜி** - விவாகம், **வல்ஜிமாஇ** - புணர்ச்சி, **வல்மரீல்கபீபி** - இலேசாகிய நசல், இவைகளைப் போலாயிருக்கும்.

அறிந்துக்கொள்ளுங்கள்! றசூல்மார்களெனவிற் சொல்லப்பட்டதே அந்தவொன்றடங்கலையும் நபிமார்களுடைய ஹக்கிலும் சொல்லப்படும் தப்லீகையும், அதனுடைய மாற்றத்தையுந் தவிர இனி நபிமார்கள் லட்சத்திருபத்தி நாலாயிரமென்றும், அதில் முறுசலான நபிமார்கள் முன்னூற்றி பதின்மூன்றென்றும் முன்னூற்றி பதினாலென்றும், முன்னூற்றி பதினைந்தென்றும் இக்திலா புண்டாயிருப்பதால், அவர்களை எண்ணிக்கையில் மட்டிடாமல் மொத்தமாக நபிமார்கள் றசூல்மார்கள் அடங்கலைக் கொண்டும் ஈமான் கொள்கிறது.

## ஈமானுடைய ஐந்தாவது ஷறுத்து.

ஈமானுடைய ஐந்தாவது ஷறுத்தாவது:—ஒடுக்கத்து நாளைக் கொண்டு ஈமான் கொள்கிறது ஒடுக்கத்து நாளொரு நாளுண்டு அதற்கு துவர்க்கம் ஹஷ்றுடைய வக்த்து தொடுத்து ஒரு தீர்மானமில்லாத வரையிலாயிருக்கும். இன்னுமதினுடைய அடையாளங்கள் முகத்தமாக்களில் நின்றும் திக்றுச்செய்யப்பட்ட தடங்கலும் ஹக்கானதாயிருக்கும். அல்லாஹுத் தஆலா அந்த நாளில் கல்குகளையெல்லா மெழுப்பி மஹ்ஷற் வழியிலே நிறுத்தாட்டிக் கேள்வி கணக்குகேட்டு முஃமினனவர்களைத் தன்னுடைய வரிசையைக்கொண்டு சொர்க்கம் புகுத்திவிப்பான் காபிர்களை அவனுடைய நீதங்கொண்டு நரகம் புகுத்திவிப்பான். பாவியாகிய முஃமினீன்களில் அவன் நாடிய பேர்களை அதாபில்லாமல் சுவர்க்கம் புகுத்திவிப்பான், அவன் நாடிய பேர்களை நரகம் புகுத்திவித்து அதாபுசெய்து பின்

ஞாலே யவர்களையுஞ் சொற்கம் புகுத்திவிப்பான். காபிர்கள் நரகத்தைவிட்டும் புறத்திப்படுத்தப்படாமல் ஊழிபதியாய் அதிலேயே கிடப்பார்கள் என்று ஈமான் கொள்கிறது.

### ஈமானுடைய ஆருவது ஷறுத்து.

ஈமானுடைய ஆருவது ஷறுத்தாவது:—கற்பனையைக்கொண்டு ஈமான்கொள்கிறது, கற்பனை ஆலத்திலுள்ள சொல், செயல், நன்மை, தீங்கு, ஈமான், குப்ர, வழிப்பாடு, பாவம், நங்கடம், பிரயோஜனம் மற்றும் கருமங்களடங்கலும் அல்லாஹுத் தஆலாவுடைய கற்பனை நாட்டங்கொண்டாயிருக்கும். அவனுடைய கற்பனையை விட்டும் நாட்டத்தைவிட்டும் யாதொன்றும் புறத்திப்படாது. என்கிலும் அவனுடைய முஹப்பத்தும், பொருத்தமும், ஏவலும் நன்மையிலேயல்லாது, தீமையிலே கிடையாது. அடியார்களுக்கு அவர்களுடைய செயல்களில் தைரியத்தை கொடுக்கப்பட்டிருப்பதால், நன்மை செய்தால் தவாபும், தின்மை செய்தால் அதாபுங் கொடுக்கப்படும் என்று அறிந்து ஈமான் கொள்ளுகிறது.

## பாபுன் பீபயானில் இஸ்லாம்.

### இஸ்லாமுடைய பயானிலே பேசுப்பாடம்,

அல்லாஹுத் தஆலா குறுஆனில் திருவுளம்பற்றினன்:—அல்யவ்ம அக்லம்த்து லக்கும் தீனக்கும் வஅத்மம்த்து அலைக்கும் நிஃமத்தீ வறலீத்து லக்குமுல் இஸ்லாம தீனா:—(எஃனி) "இஸ்லாமென்னும் மார்க்கத்தை உங்களுக்கு மார்க்கமாகப் பொருந்தி உங்கள் மீதில் என்னுடைய நிஃமத்தை தமாமாக்கி யுங்கள் தீனை இன்று நிறப்பமாக்கினேன்" என்று அல்இஸ்லாமுல் இன்கியாது லிஅவாமிரில்லாஹித் தஆலா வல்இஜ்தினபு அன்னவாஹீஹி:—(யஃனீ) "இஸ்லாமாகிறது, அல்லாஹுத் தஆலாவுடைய ஏவல்களுக்கு வழிப்பட்டு அவனின் விலக்கல்களை விட்டும் தவிழ்ந்துக் கொள்கிறதாயிருக்கும்,"

காலன்னபிய்யு ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் - (எஃனீ) நபீ ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானார்கள்; புனியல் இஸ்லாமு அலா கம்சின் - இஸ்லாமை ஐந்துகாரியத்தின் பேரி லெடுக்கப்பட்டது, முதலாவது (ஷஹாதத்து.) அன்லாயிலாஹ இல்லல்லாஹு வஅன்ன முஹம்மதுர் றசூலுல்லாஹி - உண்மையாக வணக்கத்திற்குப் பாத்திரவான் யாருமில்லை, அல்லாஹுத் தஆலாவைத் தவிர வென்றும், உண்மையாக முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமாகிறவர்கள் அல்லாஹுத் தஆலாவுடைய திருத்தூதரா யிருக்குமென்று பிசகறவறிந்து விண்ணப்

பஞ் செய்கிறது. இரண்டாவது வஇகாமுஸ்ஸலாத்தி - தொழுகையை நிலைபாடாகக் கொண்டுவருகிறது, மூன்றாவது வயீதாவுஸ்ஸக்காத்தி - ஸக்காத்துக் கொடுக்கிறது, நாலாவது வஸவ்மு றமலான - றம்லான்மாதம் நோன்பு பிடிக்கிறது, ஐந்தாவது வஹஜ்ஜுல்பைத்தி மனிஸ்ததாஅ இலைஹி ஸபீலா - கஃபத்துல்லா விற்குப்போய் ஹஜ்ஜுசெய்யத் திராணிபெற்றவர்கள் ஹஜ்ஜுசெய்கிறது.

ஆனபோதே, இஸ்லாமுடைய றுக்னுகள் ஐந்தாயிருக்கும். அதில் முந்தின றுக்னாகிய கலிமா ஷஹாதத்துக்கு நாலுறுக்னுண்டு அதாவது, அல்லாஹுத் தஆலாவுடைய தாத்தையும், ஸிபாத்தையும், அப்ஆலையும், றசூலுல்லாவுடைய உண்மையையும் தரிபடுத்துகிறது. அவைகளில் முதலாவது:—

## இதுபாத்து தாத்தில்லாஹித் தஆலா

அல்லாஹுத் தஆலாவின் தாத்தைத் தரிபடுத்துகிறது. அதாவது:—அல்லாஹுத் தஆலா வாகிறவன் யவ்ஜூதுன் - உள்ளமையுடையவன், கதீமுன் - பூர்விகமானவன், (யஃனீ) அவனுடைய உள்ளமைக்குத் துவக்கமில்லாதவன், பாக்கின் - என்றென்றும் தரிபாடானவன், (எஃனீ) அவனுடைய உள்ளமைக்கு அழிவில்லாதவன், முகாலிபுன் லில்ஹவாத்திதி - புதிதான படைப்புகளுடன்களுக்கும் ஒவ்வா வன்மையானவன், (எஃனீ) தாத்திலும் ஸிபாத்திலும் அப்ஆலிலும் ஒப்புவமையில்லாதவன், காயிமுன் பினப்ஸிஹி - தன்னைக்கொண்டு நிலைபாடானவன், (எஃனீ) பிறரளவில் ஹாஜத்தாகாதவன் ஆனபோதே, அல்லாஹுத் தஆலா திசையைவிட்டுந் தலத்தைவிட்டுந் தூய்யவன் வாஹிதுன் ஒருவனெனவென்று ஈமான் கொள்கிறது.

## இரண்டாவது இதுபாத்து
## ஸிபாத்தில்லா ஹித்தஆலா

அல்லாஹுத் தஆலாவின் ஸிபாத்தைத் தரிபடுத்துகிறது அதாவது:—அல்லாஹுத் தஆலாவாகிறவன் ஹையுன்பிஹயாத்திஹி - தன் ஹயாத்துக்கொண்டு ஹயாத்துடையவன், (எஃனீ) றூஹுகொண்டல்ல, ஆலிமுன் பிஇல்மிஹி - தன் அறிவு கொண்டறிகிறவன், (எஃனீ) கல்பில் தரிபாடாகிய கைபியத்துக்கொண்டல்ல, முரீதுன் பியிறாதத்திஹி - தன்நாட்டங்கொண்டு நாடுகிறவன், (எஃனீ) கல்பு கொண்டல்ல, காதிறுன் பிகுத்றத்திஹி - தன் குத்றத்துக்கொண்டு திராணியுள்ளவன், (எஃனீ) உறுப்புகளைக் கொண்டும் பிறரைக்கொண்டுமல்ல, ஸமீஉன் பிஸம்இஹி - தன் கேள்விகொண்டு கேட்கிறவன். (எஃனீ) காதுகொண்டல்ல, பஸீ

**றுன் பிபஸரிஹீ** - தன் பார்வைக்கொண்டு பார்க்கிறவன், (எஃனீ) கண்கொண்டல்ல, **முத்தகல்லிமுன் பிகலாமிஹீ** - தன் பேச்சைக் கொண்டு திருவசனமுடையவன், (எஃனீ) நாவுகொண்டல்ல, வென்று ஈமான் கொள்கிறது,

## மூன்றாவது இதுபாத்து
## அப ஆலில்லாஹித் தஆலா.

அல்லாஹுத் தஆலாவுடைய செயல்களைத் தரிபடுத்துகிறது அதாவது; அல்லாஹுத் தஆலாவாகிறவன், **மூஜிதுன்** - இல்லாமையில் நின்றும் வஸ்த்துக்களை யுண்டென்கிறத்தளவில் வெளிப்படுத்துகிறவன், **முஃதிமுன்** - உண்டாகிய வஸ்த்துக்களை இல்லாமையாக்கிறவன், **காலிகுன்** - படைக்கிறவன், **ரூஸிகுன்** - இரணம் கொடுக்கிறவன், **முஹ்யின்** - மவ்த்தானவர்களை ஹயாத்தாக்குகிறவன், **முமீத்து** - ஹயாத்தானவர்களை மவ்தாக்குகிறவன், **ஹாதின்** - நேர்வழி காட்டுகிறவன், **முலில்லின்** - வழிகெடுக்கிறவன், **முன்இமுன்** - சுகண்டியாக்கிவைக்கிறவன், **முன்தகிமுன்** - வேதனை செய்கிறவன், மற்றுஞ் செயலோடுங்கூடிய சிபாத்துகளைக்கொண்டு ஈமான் கொள்கிறது.

## நாலாவது இதுபாத்து ஸித்கி றசூலில்லாஹி
## ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம்.

றசூலுல்லாவுடைய உண்மையைத் தரிபடுத்துகிறது, அதாவது:—உண்மையாக கப்றுடைய அதாபு உண்டென்கிறது. முன்கற் நகிறுடைய கேள்வி யுண்டென்கிறது. ஹஷ்று நஷ்று உண்டென்கிறது. நன்மை தின்மை நிறுக்கும் திராசு உண்டென்கிறது. ஸிறுத்தல் முஸ்த்தகிம் பாலம் உண்டென்கிறது. சுவர்க்கம் நரகம் படையுன்னப்பட்டிருக்கிற தென்கிறது. இன்னுமவர்களறிவித்த விசயங்களிலு முண்மை சொன்னார்களென்று ஈமான் கொள்கிறது.

---

# பாபுன் பீ பயானில் வுழூயி

## வுழூவுடைய பயானிலே பேசும்பாடம்

**காலன்னபிய்யு ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அத்துஹூரி ஷத்றுல் ஈமான்** - எஃனீ துப்புரவாகிறது ஈமானில் பாதியாயிருக்குமென்றும், இன்னும் **மிப்தாஹுல் ஜன்னதிஸ்ஸலாது வமிப்தாஹுஸ் ஸலாதித்துஹூரி** - எஃனீ சொர்கத்துக்கு திறவுகோல் தொழுகையாயிருக்கும். தொழுகைக்கு திறவுகோல் துப்புறவாயிருக்குமென்று நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளம் பற்றினார்கள்.

இன்னும் ஹதீஸில் சொல்லப்பட்டிருக்கிறது ஒருமனிதன் வுழூ செய்ய நாடி முகத்தை கழுவினால் பார்வையால் செய்த பாவமடங்கலும், இரண்டு கையையும் கழுவினால் கையால் தொட்ட பாவமடங்கலும், இரண்டு காலை கழுவினால் காலால் நடந்த பாவமடங்கலும் ஒழுசெய்த உறுப்பு களிலிருந்து விழுகிற தண்ணீர் துளிகளில் நின்றும் நீங்கிப் போய்விடுமென செய்பிதின ஷபீஉல் முத்னபீன் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திருவுளம் பற்றினதாக ஸஹீ முஸ்லிம் கிதாபில் சொல்லப்பட்டிருக்கிறது.

## பர்லான வுழூவும், வாஜிபான வுழூவும், முஸ்தஹப்பான வுழூவும்,

அதாவது:—தொழுகைக்கு வுழூ செய்கிறது பர்லு. கஃபா வைச்சுற்றி தவாபு செய்கிறதற்கும், குர்ஆனை தொடுகிறதற்கும் வுழூ செய்கிறது வாஜிபு. குருஆன், ஹதீஸ், இல்மு இவைகளை ஓதுகிறதற்கும், பாங்கு இகாமத்து சொல்லுகிறதற்கும் அல்லாஹு தஆலாவை திக்று செய்கிறதற்கும், நபிகள் நாயகத்தை ஸியாறத்துச் செய்கிறதற்கும். அறபாமலையில் தரிப்படுகிறதற்கும், ஸபா மர்வா ஓடுகிறதற்கும், ஷற்இய்யான கிதாபுகளைத் தொடுகிறதற்கும், குத்பா ஓதுகிறதற்கும், இன்னும் இதுபோலொற்ற விஷயங்கள் அடங்கலுக்கும் வுழூவு செய்கிறது முஸ்தஹப்பாயிருக்கும்.

## வுழூவுக்கு ஷர்த்துகள் இரண்டு

ஒன்றாவது:—வுழூவுடைய உறுப்புகளில் தண்ணீரை விலக்குகின்ற சந்தணம், மாவு, மீன், சலாம்பு, கட்டிச்சுண்ணாம்பு, முதலானது இல்லாதிருக்கிறது. இரண்டாவது:—இஸ்லாமாயிருக்கிறது.

## வுழூவுக்கு பர்லுகள் நாலு.

1-வது:—முகத்தை நெற்றி மேல்புற மிருந்து நீளத்தால் நாடிக்குழி வரையிலும், வலது காதிலிருந்து அகலத்தால் இடது காது வரையிலும் இடை விடாமல் ஒரு விடுத்தம் நன்றாய் கழுவுகிறது. 2-வது:- இரு கையையும் முளங்கையுள்பட கழுவுகிறது 3-வது:- தலையில் நாலிலொருபங்கு காதின் எல்லைக்குமேல் மஸ்ஹு செய்கிறது. 4-வது:— இரண்டுக் கால்களும் கறண்டையுள்பட கழுவுகிறது.

## வுழூவின் சுன்னத்துகள் பதிமூன்று.

1-வது:—அல்லாஹு தஆலாவின் ஏவலுக்கு தலை சாய்த்து துடக்கை நீக்குவதற்காக வுழூ செய்கிறேனென்று நிய்யத்து வைக்கிறது. 2-வது:—அதாவுடன் பிஸ்மிச் சொல்லுகிறது. 3-வது:— இருகையையும் மணிக்கட்டு வரை கழுவுகிறது. 4-வது:—மிஸ்வாக்குச் செய்கிறது. 5-வது:—வாய்முழுமையும் அடைய வளைந்து

கொப்பளிக்கிறது 6-வது:— நாசி இரண்டிலும் தண்ணீர் செலுத்து கிறது. 7-வது:— தாடி அடர்ந்திருக்கிறதை கீள் புறமிருந்து கோது கிறது. 8-வது:— கழுவப்பட்ட உறுப்புகளை புதிதாகிய தண்ணீர் கொண்டு மூன்று விடுத்தம் கழுவுகிறது. 9-வது:— மூன்று தடவை கழுவினபின் கைகால் விரல்களை தண்ணீரால் கோதுகிறது. 10-வது:- தலை முழுவதையும் மஸ்ஹு செய்கிறது. 11-வது:— தலைக்கு எடுத்த தண்ணீரால் இருகாதையும் மஸ்ஹு செய்கிறது. 12-வது:- பற்லாகிய உறுப்புகளை இதில் சொல்லி யிருக்கிறபடி ஒழுங்காக கொண்டு வருகிறது. 13-வது:— உறுப்புகள் காய்கிறதற்குமுன் துடறாக கொண்டுவருகிறது.

## வுலுவின் முஸ்தஹப்புகள் மிகுதியுண்டு.

அவைகளாவது:— கிப்லாவை முன்னோக்குகிறதும், தலையில் ஒன்றுமில்லாமல் வுலூச்செய்கிறதும், வலது உறுப்புகளை முற்படுத்துவதும், இருபுறங்கைக் கொண்டு தலைக்கு மஸ்ஹு செய்கிறதும், தண்ணீரை அதிகச் சிலவு செய்யாமலிருப்பதும், அல்லாவுடைய திருநாமமெழுதின மோதிரங்களை களட்டிக் கொள்வதும், நிய்யத்துடன் வுலூச் செய்கிறேனென்று நாவால் சொல்வதும், மேட்டின் மீதிலிருந்து வுலூச் செய்வதும், வக்துவருமுன் வுலூச் செய்வதும் வுலூவில் வுதவித் தேடாமலிருப்பதும், முகத்தில் தண்ணீரை அடியாதிருப்பதும், தண்ணீர் பாத்திரம் சிறிதாயிருந்தால் இடதுபுறத்திலும், கையால் அள்ளி வுலூச் செய்யும்படியான பெரிய பாத்திரமாயிருந்தால் வலது புறத்திலுமாக்கிக் கொள்கிறதும், வாயிக்கும் நாசிக்கும் வலது கைக் கொண்டு தண்ணீர் வாங்கி இடது கைக் கொண்டு மூக்கைச் சிந்துகிறதும், உறுப்புகளைத் தேய்குகிறதும், முகத்தின் மேல்புறத்தைக் கொண்டும், விரலின் அருகைக் கொண்டும் கழுவுதலைத் துவக்கம் செய்கிறதும், காதுக்கு மஸ்ஹு செய்யும்போது சின்னி விரலை காதின் துவாரத்தில் ஆக்கிக் கொள்கிறதும், துன்யாவுடைய பேச்சுகளை அவசியமின்றி பேசாமலிருக்கிறதும், ஒவ்வொரு உறுப்புகள் கழுவும்போதும் பிஸ்மில்லா, ஸலவாத்து, ஷஹாதத்து, ஓதுவதும், அகலமான மோதிரத்தைத் திருப்பிக் கொள்வதும், வுலூச் செய்து முடிந்தபின் கிப்லாவை முன்னோக்கி நின்று அல்லது இருந்து வுலூவின் மிச்சத் தண்ணீரில் குடிப்பதும், வுலூவுக்குப் பின் பற்ஜை தொடாதிருப்பதும், உள்ளங் கால் பள்ளம் வகையறாவை ஆராயிறதும், சூறத்து இன்னாஅன்ஸல்னா ஓதுகிறதும், வுலூவுக்குப்பின் கிப்லாவை முன்னோக்கி துஆ ஓதுகிற

தும், வுழூச்செய்யும்போது ஒவ்வொரு உறுப்புகளுக்கும் ஓதவேண்டிய துஆக்களை ஓதுவதும் இன்னும் இவைபோல் அனேக முஸ்தஹப்புகள் வந்திருக்கின்றன.

## வுழூவின் மக்றூஹ்கள் எட்டு.

அவையாவன:— முகம் அல்லது அதுபோலொற்ற உறுப்புகளை தண்ணீர் கொண்டு அடிப்பதும், தண்ணீரை தன் ஹாஜத்திற்கு மேல் அதிகச் செலவு செய்கிறதும், மூன்று விடுத்தத்திற்கு மேல் உறுப்புகளை கழுவுகிறதும், அல்லது குறைக்கிறதும், மஸ்ஹூ செய்யப்பட்ட உறுப்புகளை புதிய தண்ணீர் கொண்டு மூன்று விடுத்தம் மஸ்ஹூ செய்வதும், நஜீஸான விடத்திலிருந்து வுழூச் செய்கிறதும், பெண்பிள்ளைகள் உழூச் செய்த மிச்சத் தண்ணீர் கொண்டு வுழூச் செய்கிறதும், தண்ணீரில் காறல் மூக்குச் சளியை எறிகிறதும், பள்ளிக்குள் தண்ணீர்ச் சிந்தும்படி வுழூச் செய்கிறதுமாயிருக்கும்.

## உழூவின் முறித்தல்கள் ஒன்பது.

அதில் 1-வது:—முன்துவாரம் பின்துவாரத்திலிருந்து யாதொரு வஸ்துவுக்கள் வெளிப்படுகிறது. 2-வது:—சரீரத்தில் நின்றும் யாதொரு இறத்தம் ஹைஹு ஜலம் புறப்பட்டு காயத்தை விட்டுவெளிங்கோடுகிறது. 3-வது:—வாய் நிறம்ப சத்தி எடுக்கிறது. 4-வது:—இருப்பிடம் பூமியை விட்டு நீங்கும்படியிருந்து ஒரு வஸ்துவில் பிலமாக சாய்ந்து நித்திரை செய்கிறது. 5-வது:—பைத்தியம் பிடிக்கிறது. 6-வது:—போதக் கேடாகிறது. 7-வது:—ஒரு வஸ்துவை தின்று வாகரியாகிறது. 8-வது:— ருகூஉ சுஜூதுடைய தொழுகையில் பாலிகானவர்கள் முளிப்புடன் வெடி சிரிப்பு சிரிக்கிறது. 9-வது:—ஸகுரு உசும்புதலுடன் ஆணும் பெண்ணும், அல்லது ஆணும் ஆணும் அல்லது பெண்ணும் பெண்ணும் திரையன்றி அபம் ஒன்றோடொன்று சந்திக்கிறது.

---

## வுழூ வில்லாதவர்க்கு மூன்று செயல் ஹறாம்.

1-வது:—தொழுகிறது. 2-வது:—கஃபாவை சுற்றி தவாபு வருகிறது. 3-வது:—உறையில்லாமல் குருஆனை தொடுகிறது, அது ஒரு ஆயத்தாயிருந்தாலும் சரி.

---

# பாபுன் பீ பயானில் குஸ்லி

## முளுக்குடைய பயானை பேசும் பாடம்.

இப்னு உமற் றலியல்லாஹு அன்ஹுவைத் தொட்டும் பேசிவரப்பட்டிருக்கிறது. றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளமானார்கள் இரண்டு பேரும் சேர்ந்து கத்னாவரை மறைந்தால் மனி இறங்கினாலும் இறங்கா விட்டாலும் இரண்டு பேர்கள் மீதிலும் முளுக்கு விதியாகி விட்டதென்று திருவுள்ளம் பற்றினார்கள்.

**காலல்லாஹு தஆலா வஇன் குந்தும் ஜுனுபன் பத்தஹ்ஹறூ:**—அல்லாஹு தஆலா குருஆனிலே, ஜுனுபாயிருந்தால் துப்புரவாக்கிக் கொள்ளுங்கள், என்று திருவுளமானான். அபூஹுறைறா றலியல்லாஹு அன்ஹுவைத் தொட்டும் றிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் சொன்னார்கள். றசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திருவுள்ளம் பற்றினார்கள்:—ஒவ்வொரு முடி-அடங்கலுக்கும் தாளாலே ஜனாபத்திருக்கிறது. ஆனதால் முடி அடங்கலையும் கழுகுங்கள். மேனியை வெடிப்பாக்குங்கள் என்று.

---

## முழுக்கை விதியாக்கும் கருமங்கள் ஐந்து.

1-வது:—நித்திரையில் அல்லது முளிப்பில் இந்திரியம் ஆண்பிள்ளையின் முதுகந் தண்டிலிருந்தும், பெண்பிள்ளையின் நெஞ்சாங்குளியிலிருந்தும் புறப்படுகிறது. 2-வது:—ஜிமாஉக்கு தகுமான ஹயாத்தான மனிதரின் இருதுவாரத்தி லொன்றில் மனிதருடைய தகரின் வரந்தை மறையும்படி சேர்க்கை செய்கிறது 3-வது:—நித்திரையில் ஷைத்தான் ஹறகத்து இஹ்திலாமாகிறது. அது ஞாபகமிருந்தாலும், இல்லாதிருந்தாலும் முளித்தவுடன் தன் துணியில் அல்லது துடையில் மனிஅல்லது வதீயின் ஈரத்தை காண்கிறது. 4-வது:—ஹைலு நிற்கிறது. 5-வது:—நிபாஸென்னும் பேற்காலத்துடக்கு நிற்கிறது.

---

## முழுக்கில் பர்லு மூன்று.

1-வது:—வாயை நன்றாய் கொப்பளிக்கிறது. 2-வது:—நாசிக்கு தண்ணீர்ச் செலுத்துகிறது. 3-வது:—தொப்புள்மேல் மீசை புருவம் தாடி தலை ரோமங்கள் பெண்பிள்ளைகள் உட்காரும்போது வெளியில் தெரியும்படியாகிய அபம் உள்பட நன்றாய் நனையும்படி கழுவுகிறது.

---

## முழுக்கின் சுன்னத்துகள் ஏழு.

1-வது:—என் பேரிலுள்ள ஜனுபத் தென்னும் பெருந்துடக்கை நீக்குவதற்காக அல்லாஹுதஆலாவின் ஏவலுக்கு வழிப்படுகிறேன் என்று நிய்யத்து வைக்கிறது. 2-வது:—பிஸ்மில்லாச் சொல்லுகிறது. 3-வது:—இரு கையையும் மணிக்கட்டு வரை கழுவுகிறது. 4-வது:—முன்பின் துவாரத்தை கழுவுகிறது. 5-வது:—சரீரம் பிடவைகளின் நஜீஸை கழுவுகிறது. 6-வது:—வுலூ செய்கிறது. 7-வது:—தலைபிலும் இரு தோளிலும் சரீர மடங்கலின் பேரிலும் மும்மூன்று விடுத்தம் தண்ணீர் வார்க்கிறது.

---

## மூன்று வகுப்பார்கள் பேரில் குளித்தல் பற்லாகும்.

1-வது:—மைபித்தை குழுப்பாட்டுகிறதும், 2-வது:—ஜுனுபாக இஸ்லாம் மார்க்கத்தில் வந்தவன் குளிக்கிறதும், 3-வது:—இன்ஸாலைக்கொண்டு அல்லது ஹைலைக்கொண்டு பாலிகான சிறு பிள்ளைக்குளிக்கிறதுமாம்.

---

## சுன்னத்தான குளித்தல்கள் நாலு.

1-வது:—ஜும்ஆ தொழுகைக்கு குளிக்கிறது:—2-வது:—இரு பெருநாள் தொழுகைக்கும் குளிக்கிறது:—3-வது:—ஹஜ்ஜுக்கு இஹ்றும் கட்டும்போது குளிக்கிறது. 4-வது:—அறபாவில் தரிக்கும்போது குளிக்கிறது.

---

## முஸ்தஹப்பான குளித்தல்கள் பதினுன்கு.

1-வது:—முழுக்கென்னும் பெருந் துடக்கில்லாமல் இஸ்லாமில் வந்தவன் குளிக்கிறது. 2-வது:—பைத்தியக்காறன் தெளிவு பெற்ற பின் குளிக்கிறது. 3-வது:—சிறுபிள்ளை பாலிகான உடன் குளிக்கிறது. 4-வது:—மஸ்தானவன் தெளிவுப் பெற்றவுடன் குளிக்கிறது. 5-வது:—இரத்தம் குத்தி வாங்கினவன் குளிக்கிறது. 6-வது:—ஷஃபான் மாதம் பறுஅத்து இரவில் குளிக்கிறது. 7-வது:—லைலதுல் கத்ர் இரவில் குளிக்கிறது. 8-வது:—அறபா இரவில் குளிக்கிறது. 9-வது:—மக்காவில் புகுதும்போது குளிக்கிறது. 10-வது:—

கிருண தொழுகைக்கு குளிக்கிறது. 11-வது:—மழைக்காக தொழு கும்போது குளிக்கிறது. 12-வது:—திடுக்கம் உண்டானபோது குளிக்கிறது. 13-வது:—இருள் கடிசானபோது தொழுகைக்காக குளிக்கிறது. 14-வது:—காற்று நீங்குவதற்காக தொழுகும்போது குளிக்கிறது.

---

### ஜுனுபாளி பேரில் ஐந்து காரியம் ஹறும்.

1-வது:—தொழுகிறது. 2-வது:—பள்ளியில் புகுதுகிறது. 3-வது:—கஃபாவை தவாபு செய்கிறது. 4-வது:—குற்ஆனை ஓதுகிறது. 5-வது:—குற்ஆனைத் தொடுகிறது.

---

## பாபுன் பீ பயானில் ஹைறலி வன்னிபாஸ்.

### ஹைறலு நிபாசுடைய விவரத்தை பேசும் பாடம்.

ஹைறலாகிறது ஒன்பது வயது முதல் அன்பத்தைந்து வயது வரையுள்ள ஹமலில்லாத பெண்ணுடைய கெர்ப்பக் குவளையில் நின்றும் வெளியாகும் இறத்தமாகும். அதன் நிறம் தூய்ய வெள்ளையைத் தவிற கருப்பு சிவப்பு மஞ்சள் பச்சை மண்ணிரம் கலங்கல் ஆக ஆறு நிறமாயிருக்கும்.

இனி ஹைறலுடைய காலத்தில் குறைந்தது இரவு பகல் மூன்று நாள், மிகுந்தது பத்துநாள். ஆனால் இடைவிடாமல் ஓடிக்கொண்டிருப்பது ஷற்தல்ல. பத்து நாளைக்கு அதிகமாய் கண்டாலும், மூன்று நாளைக்கு குறைந்தாலும் அது ஹைறலல்ல. நிபாசாகிறது:—பிள்ளை பிறந்தது முதல் கர்ப்பத்தில் நின்றும் வெளியாகும் உதிரமே நிபாசாம். நிபாசில் குறைந்தது ஒரு நொடி நேரமாயிருக்கும் அதில் மிகுந்த நாள் நார்ப்பது நாள் மட்டாயிருக்கும்.

இனி ஹைறலு நிபாசுடைய காறணத்தால் விட்ட நோன்பை கலாச் செய்ய வேண்டியது கடமை. தொழுகையை கலாச் செய்ய வேண்டியது கடமையல்ல.

இனி ஹைறலில் குறைந்த மூன்று நாளைக்கு உட் பட்டும், மிகுந்த பத்து நாளைக்கு மேல் பட்டும், நிபாசில் நார்ப்பது நாளைக்கு பிர்ப்பட்டும் காணும் இறத்தம் இஸ்திஹாலத்தென்னும் பெரும்பாடாகிய சூதக வியாதியாகும். இதின் ஹுக்முகளை விரிவாய் பார்க்க நாடுகிறவர்கள் பெரிய கிதாபுகளில் பார்த்துக் கொள்ள வேண்டியது.

## ஹைலு நிபாசுடைய பெண்பிள்ளைகள் எட்டு காரியம் செய்தல் ஹறாம்.

1-வது:—தொழுகிறது. 2-வது:—பள்ளியில் புகுதுகிறது. 3-வது:—கஃபாவை தவாபு செய்கிறது. 4-வது:—குற்ஆனை ஓதுகிறது. 5-வது:—குற்ஆனை தொடுகிறது. 6-வது:—நோன்பு பிடிக்கிறது. 7-வது:—தொப்புளுக்கும், முட்டுக்கும் இடையிலுள்ள உறுப்புகளை ஆண் பிள்ளைத் தொடுகிறது. 8-வது:—ஜிமாஉ செய்கிறது.

---

## பாபுல் பீ பாயானில் மியாஹ்,

### தண்ணீருடைய பயானை பேசும் பாடம்.

சிறு தொடக்கு பெருந்தொடக்கு இரண்டையும் மாஉன் முத்லகென்னும் மொத்தமாகிய தண்ணீர் கொண்டு நீக்க வேணும். அதாவது:—வானத்துத் தண்ணீர், குளத்துத் தண்ணீர், கிணற்றுத் தண்ணீர், ஆற்றுத் தண்ணீர், கடல் தண்ணீர் இவை போலொற்றதாம். முகய்யிதென்னும் யாதொரு பெயர் கொண்டு குறிப்பிடப்பட்ட தண்ணீரினால் நீக்கப்படாது. அதாவது மாத்து நீர், பழத்து நீர், யாதொரு வஸ்துவை முத்லகான தண்ணீரில் கலந்ததால் தண்ணீரைக்காண அவ்வஸ்து அதிகமாக இருக்கிற தண்ணீர், நஜீசை நீக்குவதன்றி உலுவு வகைறுக்களில் பரிமாறப்பட்ட முஸ்தஃமலான தண்ணீர் இவைகள் போலொற்ற தண்ணீராயிருக்கும். இனி உப்பு விளைகிற தண்ணீரைக் கொண்டும் துடக்கை நீக்கப்படாது. பொழுதில் சூடான தண்ணீரைக் கொண்டு துடக்கை நீக்குகிறது மக்றூஹாயிருக்கும்.

### ஹௌளின் ஹுக்ம்.

ஹௌளின் ஹுக்மாவது:—தஹ், தர்தஹ் என்னும் பத்திலே பத்தை எத்திய பெரிய ஹௌளு போலொற்ற கட்டுக்கிடைத் தண்ணீரின் ஹுக்மாவது:-சாலுச் சவுக்கமாயிருந்தால் சுற்றுக்கு நாற்பது முளமும், வட்டமாயிருந்தால் முப்பத்தாறு முளமுமாகவிருந்து அதில் தண்ணீர் அள்ளும் போது நிலம் வெளியாகாதபடிக்குள்ள ஆளமாக விருந்தால் அதில் குளிக்கிறதும், வுலூ செய்கிறதும், ஆகும்.

## ஓடுகிற தண்ணீரின் ஹுக்ம்.

ஓடுகிற தண்ணீரின் ஹுக்மாவது:—வைகோல் துரும்பை ஓட்டுகிற தண்ணீராயிருந்தால் அதில் குளிக்கிறதும் வுலூச் செய்கிறதும் ஆகும். இவ்விருவகை தண்ணீரிலும் நஜீசு விழுந்தால், அதன் குணமாகிய வாடை, நிறம், சுவை, இம்மூன்றி லொன்றையாவது அத்தண்ணீரில் காணப்பட வில்லையானால் அதில் குளிக்கிறதும், குடிக்கிறதும், வுலூச் செய்கிறதும் ஆகும். இக்குணத்தி லொன்றைக் காணப்பட்டாலும், ஷெ அளவுக்கு குறைந்த தண்ணீரில் நஜீசு விழுந்து அதின் குணத்தைக் காணப்பட வில்லையானாலும், யாதொன்றும் கூடாது.

## கிணற்றுத் தண்ணீரின் ஹுக்ம்.

கிணற்றுத் தண்ணீரின் ஹுக்மாவது:—பத்திலே பத்துக்கு குறைந்த கிணற்றில் ஒரு துளி நஜீசு விழுந்தாலும், அல்லது தண்ணீரில் ஜீவிக்காத ஓடும்படியான இரத்தமுள்ள எந்த மிருகமாவது விழுந்துச் செத்து ஊதினாலும், அல்லது உடைந்தாலும், அல்லது வெளியில் செத்து ஊதியதை அதிலெறிந்தாலும், அல்லது நாய், ஆடு, மாடு, மனிதன், இவைபோலொற்றது விழுந்து மரணமானாலும்; அவைகளை எடுத்தெறிந்து விட்டு நடுத்தரமான பட்டையில் அரை பட்டை நிரப்பாத ஹத்துவரை அத்தண்ணீர் அடங்கலையும் இறைக்கப்படவேண்டும். எலி சிட்டுக்குருவி பல்லிபோலொற்றது விழுந்து இறந்தால் அதை நீக்கியபின் 20 பட்டை முதல் 30 பட்டை வரையிலும், புறு, கோழி, பூனை, இவைபோலொற்றது விழுந்துச் செத்தால் 40 பட்டைமுதல் 50 பட்டை வரையிலும் இறைக்கப்பட வேண்டும்.

இனி வுலூ வில்லாதவன் அல்லது முழுக்கு உள்ளவன் விழுந்து ஹயாத்தாக எழும்பினால் தண்ணீர் அடங்கலையும் இறைக்கப்பட வேண்டுமென்றும் 40 பட்டை இறைக்கப் படவேண்டுமென்றுங் கிலாபுண்டாயிருக்கிறது. இனி ஒலித்தோடும்படியான இரத்தமில்லாத மூட்டை கொசு ஈ வண்டு நட்டுவாக்காலி போலொற்ற வஸ்துவும் தண்ணீரில் பிறந்து ஜீவிக்கிற மீன், நண்டு, தவளை, போலொற்ற வஸ்துவும் தண்ணீரிலிருந்திறந்தால் அந்தத் தண்ணீர் நஜீசாகாது. மேல் கூறிய சிறு கிணற்றில் யாதொரு ஹைவான் விழுந்து இறந்த நேரத்தை அறியப்பட்டாலும் அல்லது இன்ன தினத்தில் விழுந்து இறந்ததென்று இரண்டு மனிதன் சாக்ஷி சொன்னாலும், செத்த நேரத்திலிருந்து அத்தண்ணீரை கனத்த நஜீசு என்கிறது கொண்டு ஹுக்ம் செய்யப்படும், அந்நேரத்தை அறியப் படாமலும், ஊதாமலும், உடையாமலுமிருந்தால் ஒரு இரவும் பகலும் நஜீசாகிவிடும், ஊதினாலும் உடைந்தாலும் மூன்று இரவு பகல் நஜீசாகிவிடும். ஆனபோதே

அந்தத் தண்ணீரால் வுளூச் செய்து தொழுத தொழுகையை கலாச் செய்வதும் அத்தண்ணீர்பட்ட வஸ்தடங்களையும் கழுவுகிறதும், வாஜிபாயிருக்கும். இனி சிறு கிணற்றில் தின்ன ஆகுமான பறவைகளில் கோழி தாறுவைத் தவிற புறு சிட்டுக்குருவி போலொற்றதும், தின்ன ஹறாமான பறவைகளும் எச்சம் போட்டாலும், ஊசிநுனி போல் சிதறின சிறு நீர் தெறித்தாலும், அல்லது நஜீசான தூசி பறந்தாலும், ஒட்டகையின் ஆட்டின் புளுக்கையில் ஒன்றிரண்டு விளுந்தாலும், இறைக்கிறது, வாஜிபில்லை. காட்டின் ஆடு மாடு மிருகமான புளக்கமான விடத்திலுள்ள சுற்றுக் கட்டில்லாத கிணற்றில் விட்டை சாணி விழுந்தால் தங்கடத்திற்காக பொறுக்கப்படும். தங்கடமில்லையானால் நஜீசாகிவிடும்.

## எச்சல தண்ணீரின் ஹுக்ம்.

எச்சலின் ஹுக்மாவது:—மனிதன் வாய்வைத்துக் குடித்து மிஞ்சிய எச்சலும், தின்ன ஹலாலான உயிர்ப் பிராணிகளின் எச்சலும் துப்புறவாயிருக்கும் நாய் கின்ஸீருடைய எச்சலும், ஐவாய் மிருகங்களின் எச்சலும் நஜீசாயிருக்கும். விட்டுப்பூனை அவிள்த்து விட்டு மேய்கிற கோழி ஐவாய் பறவைகள் இவைகளின் எச்சலும், பாம்பு எலி போல் வீட்டில் குடியிருக்கிறதின் எச்சலும்; அஜ்னபிய்யத்தான ஆண் பெண் இருவரிலொருவர் வாய்வைத்து குடித்து மிஞ்சிய எச்சலும், மக்றூஹாயிருக்கும். இனி அந்தந்த வஸ்த்துக்களின் வேர்வைக்கு ஹுக்மாகிறது. அவைகளின் எச்சலின் ஹுக்மாயிருக்கும் கழுதை கோவேருகழுதையின் எச்சல் மஷ்கூகாயிருப்பதால் அது கொண்டு வுளூச் செய்தாலும், குளித்தாலும் தயம்மும் செய்ய வேண்டும்.

## முஸ்தஃமலான தண்ணீர்.

முஸ்தஃமலான தண்ணீராகிறது:—சிறுதுடக்கு பெருந்துடக்கு இவைகளை நீக்குவதற்கு, அல்லது ஒரு உறுப்பின் பற்லை விழுத்தாட்டுகிறதற்கு, அல்லது வுளூ வுள்ளவன் மறுபடியும் தவாபை நாடினதற்கு பறிமாற்றம் செய்து உறுப்பை விட்டும் பிரிந்த தண்ணீருக்கும், இன்னும் ஒஜீபனிக்க முன்னும் பின்னும் சுன்னத்துடைய நிய்யத்துக் கொண்டு கையை கழுவுகிறதில் உண்டான தண்ணீருக்கும் முஸ்தஃமலான தண்ணீரென்று சொல்லப்படும். அந்த முஸ்தஃமலான தண்ணீரைக் கொண்டு மறுவிடுத்தம் சிறிதுடக்கை அல்லது பெருந்துடக்கை நீக்கப்படாது. ஆனால் நஜீசு பட்ட வஸ்துகளை அதைக் கொண்டு கழுவுகிறது ஆகும். குடிக்கிறது மக்றூஹ். இனி சிறு துடக்கு பெருந்துடக்குள்ளவன் தஹ்ற தற்தஹுக்கு குறைந்த தண்ணீரில் வாஜிபாகிய

உறுப்புகளில் சிலதை கழுகினாலும் சிறங்கித்து அள்ளுகிற அல்லது அதனுள் விழுந்த பாத்திரத்தை எடுக்கிறஹாஜத்தன்றியே கையை வுள்ளே விட்டாலும் அத்தண்ணீர் முஸ்தஃமலாகிவிடும். ஆனால் முன் கையை புகுதி வைப்பதுபோல் நிறப்பமாகிய ஒரு உறுப்பை புகுது விக்கிறது ஷர்தாயிருக்கும். ஒரு விரலை அல்லது மிகுந்த விரலை புகுது விக்கிறது கொண்டு முஸ்தஃமலாகாது.

---

# பாபுன் பீ பயானித்தயம்முமி.

## தயம்மமுடைய பயானை பேசும் பாடம்.

தயம்முமாகிறது:—தண்ணீரை விட்டும் ஒரு மயில் தூரத்தி லிருக்குமானவன் அல்லது தண்ணீரை பரிமாறினால் வியாதி அதிகப் படுமென்று பயந்தவன் அல்லது வேறே எவ்விதத்திலாவது தண் ணீரை பரிமாற திராணி பெறாதவன் ஒழுவுக்கு அல்லது முழுக்குக்கு பகரமாக தயம்மும் செய்ய வேண்டும்.

### தயம்மமுக்கு ஷர்துகள் ஆறு.

1-வது:—தொழுகைக்காக தயம்மும் செய்கிறேன் என்று நிய் யத்துச் செய்கிறது. 2-வது:—கொஞ்சமாகிலும் இடை விடாமல் முக த்தையும் முளங்கை உள்பட இரண்டு கையையும் அடைய வளைந்து தடவுகிறது. 3-வது:—மூன்று விரலால் அல்லது மிகுந்த விரலால் தடவுகிறது. 4-வது:—பூமியில் மண், மணல், கல், காறை, சுண் ணம்பு, சுருமா, காக்கா பொன், செம்மண், இவைபோல் கொற்றவை களில் நெருப்பிலிட்டால் ஒரு காலமும் சாம்பலாகாத்ததுவுமாயிருக் கிறது. 5-வது:—பூமி துப்புறவாயிருக்கிறது. 6-வது:—தண்ணீரில் லாமல் அல்லது தண்ணீரை பரிமாற திராணி பெறாதிருக்கிறது.

### தயம்மமுடைய ருக்னுகள் இரண்டு.

1-வது:—முகத்தையும் முளங்கை வரை இரண்டு கையையும் தடவுகிறதற்கு பூமியில் அல்லது அதன் இனத்தில் இருகை கொண்டு இரண்டு தடவை அடிக்கிறது. 2-வது:—முகத்தையும் முளங்கை வரை இருகையையும் அடைய வளைந்து தடவுகிறது.

### தயம்மமுடைய சுன்னதுகள் ஏழு.

1வது:—இரு முன் கையின் உள்புறத்தால் அடிக்கிறது. 2-வது:- அக்கையை முன்னால் பின்னால் இழுக்கிறது. 3-வது:—கையை உதருறது. 4-வது:—விரல்களை விடுத்துகிறது. 5-வது:—அஊது பிஸ்மில் சொல்லுகிறது. 6-வது:—தர்த்திபாக கொண்டுவருகிறது. 7-வது:—துடருகச் செய்கிறது.

### தயம்முமை முறிக்கும் கருமங்கள் மூன்று

1-வது:--உலூவை முறிக்கும் கருமங்கள் உண்டாகிறது. 2-வது:- தன் ஹாஜத்துக்கு அதிகமான தண்ணீரின் பேரில் திருணி பெருகிறது 3-வது:—தயம்மும் செய்ய நேரிட்ட தங்கடம் நீங்குகிறது.

## பாபுன் பீ பயானின் னஜாஸதி.

### நஜீசுகளுடைய பயானை பேசும் பாடம்.

வுலூவில்லாமலிருப்பதையும், முழுக்காளியாயிருப்பதையும், ஹுக்மிய்யத்தான நஜீஸென்றும், மற்ற நஜீசுகளை ஹகீகிய்யான நஜீசென்றும் சொல்லப்படும், ஹுக்மிய்யான நஜீசுகளின்பாடம் முந்திவிட்டது ஹகீகியான நஜீசுகளின் ஹுக்முகளாவது.

ஹகீகியான நஜீசுகள் இரண்டு வகைப்படும். 1-வது:—முகல்லதாவென்னும் கனத்த நஜீசு. அதாவது:—மலம், ஜலம், இந்திரியம், மதீ, வதீ, இரத்தம், சீள் சலம், வாய் நிறம்பிய சத்தி, பன்றி, சாருயம், கள்ளு, செத்ததின் இரச்சி, அதன் பச்சைத்தோல், ஆகாயத்தில் பாக்கும்போது எச்சம்போடாத கோழி, தாரு, இவைபோலொற்றதின் எச்சம், விட்டை, சாணி, புளுக்கை, தின்னப்படாத ஜவாய் மிருகங்களின் மலம், ஜலம், இவைகளின் வாய்நீர், பூனையின் மலம், ஆகியவைகளாம், இந்த நஜீசில் திர்ஹத்துடைய கத்றை பொறுக்கப்படும். அதாவது:—இழகலான நீர் போல் கொற்றதில் நின்றும் உள்ளங்கை பள்ளத்தின் அகலமும், கண்டிப்பானதில் நின்றும் ஒரு களஞ்சி இடையும் சரீரத்திலாவது, பிடவை முதலிய வைகளிலாவது பட்டிருந்தால் பொறுக்கப்படும். ஆனால் அந்த கத்றை வைத்துக் கொண்டு தொழுகிறது மக்றூஹ் தஹ்ரீமாகும், மறதி அல்லது தங்கடங் கொண்டொழிய, ஆனால் அந்த கத்றை கழுகிறது வாஜிபாகவும், அதற்கு குறைந்த கத்றை கழுகிறது சுன்னத்தாகவு மிருக்கும்.

2-வது:—முகப்பா வென்னும் இலேசான நஜீசாகிறது:—தின்னப்பட்ட ஹைவானின் மூத்திரமும், குதிரை மூத்திரமும், தின்னப்படாத பரவைகளின் எச்சலுமாயிருக்கும். இந்த நஜீஸில் அதுபட்ட உறுப்பில் நாலி லொருபங்குக்கு குறைந்ததையும் தொழுகையில் பற்லான உறுப்பை மறைக்கும்படியான பிடவை போல் கொற்றதில் நாலிலொரு பங்குக்கு குறைந்ததையும், ஊசி முனைபோல் தெரித்த மூத்திரத்தையும் கழுதை எச்சையையும் பொறுக்கப்படும். விரிவாய் பார்க்க நாடுகிறவர்கள் பெரிய கிதாபுகளில் பார்த்துக் கொள்ளவும்.

---

## பாபுன்பீ அவ்காதிஸ் ஸலாத்.

### தொழுகையுடைய வக்துகளை பேசும் பாடம்.

பஜ்று தொழுகையின் வக்தாகிறது:—கிழக்கே மே வெள்ளை கிறினது முதல் பொழுது உதயமாகிறதற்கு சற்று முன் வரையிலாயிருக்கும். ஆனால் ஆண் பிள்ளைகள் பஜ்று தொழுகையை நீலம் தெளிந்து தொழுகிறது முஸ்தஹப்பு,பெண்பிள்ளைகள் இருளிருக்கும் போதே தொழுகிறது எற்றமா யிருக்கும். பஜ்ருடைய பற்லுக்கு முன் இரண்டு றகஆத்து சுன்னத்து.

லுஹருடைய வக்தாகிறது:—மதியத்தில் சூரியன் சற்று மேர்க்கே திரும்பியது முதல் ஒருவஸ்துவுடைய உச்சி சாய்வு நிழலைத் தவிற அவ்வஸ்துவின் இருபங்கு நிழல் கிழக்கே சாய்கிர வரையிலுமாயிருக்கும். வெயில் காலத்தில் லுஹறை இமாம் ஜமாஅத்துத் தவராவிட்டால் கொஞ்சம் பிப்படுத்துவது முஸ்தஹப்பாயிருக்கு மென்பதில் ஒரு பங்கு சாய்கையை எத்துமுன் தொழவேண்டும். திட்டமாக இமாம் ஜமாஅத்து தப்புகிறதாயிருந்தால் பிப்படுத்துகிறது ஹறாம். ஜும்ஆ தொழுகையை பிப்படுத்துகிறது முஸ்தஹப்பில்லை. மாரிகாலத்திலும், பனிகாலத்திலும், மேகமில்லாத நேரத்தில் லுஹறை முப்படுத்துவது முஸ்தஹப்பு, மேகமிருந்தால் பிப்படுத்துவது முஸ்தஹப்பாகும். அந்த வக்தில் பற்லுக்குமுன் நாலு றகஆத்தும், பின் இரண்டு றகஆத்தும் சுன்னத்து.

அஸருடைய வக்தாகிறது:—உச்சி நிழலைத்தவிர இருசாய்கை யானது தொடுத்துச்சூரியன் அடையும் வரையிலாயிருக்கும். ஆனால், காலமடங்கலிலும் மஞ்ச வெய்யில் இறங்காமலிருக்கிற வரையிலும் பிப்படுத்துகிறது. மேகமில்லாதிருக்கும் நேரத்தில் முஸ்தஹப்பு மேக மிருந்தால் அவ்வல் வக்திலேயே தொழுகிறது முஸ்தஹப்பாயிருக் கும்.

மகரிபுடைய வக்தாகிறது:—பொழுதடைந்தது முதல் செம்மே கம் மறையும் வரையிலாம். எக்காலமும் மக்ரிபை முப்படுத்துவதே முஸ்தஹப்பாயிருக்கும். அதில் பற்லுக்குப்பின் இரண்டு றகஆத்து சுன்னத்து. இனி ஸலாத்துல் அவ்வாபீன் என்னும் தொழுகை ஒரு றக ஆத்து நபில் தொழுகிறது முஸ்தஹப்பு.

இஷாவின் வக்தாகிறது:—செம்மேகம் மறைந்தது முதல் கிழ க்கு வெளுக்கிற வரையிலாயிருக்கும். மாரிகாலத்தில் இரவில் மூன்றி லொருபங்கு வரையில் இஷாவைப் பிப்படுத்துகிறதும், கோடைகா லத்திலும் மேகத்துடைய நாளையிலும் வக்துப் புகுந்தது திட்டமான வுடன் அவ்வல் வக்திலே முப்படுத்துகிறது முஸ்தஹப்பு. இதில் பற் லுக்குப் பின் இரண்டு றகஆத்து சுன்னத்து. இஷாவுக்குப் பின் தொ ழுகிற வித்ரை மேவெள்ளை கிரமுன் நிக்ஷயமாக முளிப்பதை அறிந்த வன் இரவின் கடைசி வரைப் பிப்படுத்துகிறது முஸ்தஹப்பு. அப்ப டிக்கில்லையானால் நித்திரைச் செய்யுமுன் தொழவேண்டும். இஷாவுக்கு முன் நித்திரை செய்கிறதும் இஷாவுக்குப் பின்னும் பஜ்ருசாதிருக் கும் மேற்படி தொழுகைக்கு மிடையிலும் ஆமான பேச்சு பேசுகிற தும் மக்றூஹாயிருக்கும்.

## ஹறாமான வக்துகள்.

ஹறாமானவக்துகளாவது:—சூரியன் உதயமாகி ஒருவல்லயப் பிறமாணமாகிற வரையிலும், சூரியன் உச்சியிலிருக்கும் போதும், சூரி யன் மஞ்சனித்து அடைகிற வரையிலுமாயிருக்கும். இம்மூன்று வக்தி லும் கலா தொழுகை, நபில் தொழுகை, ஜனஸா தொழுகை, திலாவத் தின் ஸஜதா, இதுபோலொற்றது யாதொன்றும் செய்யலாகாது. செய்தாலும் கூடாது. ஆனால் அன்றைய அஸர் தொழுகை பிந்தி விட் டால் சூரியன் மஞ்சனித்தபோதிலும் அவ்வக்தின் பற்லை அதாச் செய் வதும், அம்மூன்று வக்தில்வந்து ஹாலிருன ஜனஸாவை தொழுவிக் கிறதும் அதுகளில் ஓதின ஸஜதாதிலாவத்துச் செய்கிறதும் ஆகும்.

## மக்றூஹான வக்துகள்.

மக்றூஹான வக்துகளாவது:—பஜ்ரு தொழுதப் பின்னும், அஸர் தொழுத பின்னும், இமாம் குத்பா ஓத மின்பரில் ஏறியது முதல் தொழுது முடிக்கிற வரையிலும், மக்ரிபுடைய பற்ளுக்கு முன்னுமாயிருக்கும். இவ்வக்துகளில் நபில் தொழுகிறதும், நேர்ச்சையான தொழுகைகளைத் தொழுகிறதும், பற்லான தொழுகைக்கு இகாமத்துச் சொன்னபின் சுன்னத்துத் தொழுகிறதும், இஷாவை பாதி இரவானபின் தொழுகிறதும், இரண்டு பெருநாள் தொழுகைக்கு முன் சுன்னத்துத் தொழுகிறதும், பற்ளுக்கு வக்து கிட்டுமையாயிருக்கும் போது சுன்னத்துத் தொழுகிறதும், வஜீபனம் ஹாலிருபிருக்க கல்பை அதளவில் பராக்காக்கிக் கொண்டு தொழுகிறதும் மக்றூஹாயிருக்கும்.

---

# பாபுன் பீ பலீலதிஸ்ஸலாத்.

## தொழுகையுடைய வருசையை பேசும்பாடம்.

**காலல்லாஹு தஆலா இன்னஸ் ஸலாத கானத் அலல் முஃமினீன கிதாபன் மவ்கூதா** - எனனீ தொழுகையை இஸ்லாமாகிய ஜனங்கள் பேரில் ஐந்து வக்து தொழும்படி வேத விதியாக்கினேன், என்று அல்லாஹுத் தஆலா குர்ஆனில் திருவுளம் பற்றினன். (ஹதீது) கியாமத்து நாளில் அல்லாஹுத் தஆலா கல்குகளை யெழுப்பும்போது சிலக்கூட்டத்தார்கள் நக்ஷத்திரங்களைப் போல் முகமாக எழுந்திருப்பார்கள், அப்போது மலக்குகள் நீங்கள் என்ன அமல் செய்தீர்கள் உங்களுக்கு இவ்வளவு வெகுமதி கிடைத்த தென்று கேட்க நாங்கள் பூமியிலிருக்கும்போது பாங்கு சத்தத்தைக் கேட்டவுடன் என்ன வேலையிருந்த போதிலும் அவைகளை யெல்லாம் விட்டு விட்டு வுலூச் செய்து தொழுதோ மென்று சொல்வார்கள். இன்னும் சில கூட்டத்தார்கள் சந்திரனைப்போல் முகமாக எழுந்திருப்பார்கள். அப்போது மலக்குகள் நீங்கள் என்ன அமல் செய்தீர்கள் என்று கேட்பார்கள், நாங்கள் பாங்குசத்தம் கேட்பதற்கு முன்பாக வுலூச் செய்து தொழுகிறதற்காக தயாருபிருந்தோ மென்றுச் சொல்வார்கள். இன்னும் சில கூட்டத்தார்கள் சூரியனைப்போல் முகமாக எழுந்திருப்

பார்கள், அபபோது மலக்குகள் நீங்கள் என்ன அமல் செய்தீர்கள் என்று கேட்பார்கள், அதற்கு நாங்கள் பாங்கு சத்தத்தை பள்ளிக்குள்ளிருக்கும் போது கேட்டோமென்று சொல்வார்கள், என்று நபி நாயகம் முஹம்மது சல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவாய் மலர்ந்தருளினார்கள்.

## பாபுன் பீ உகூபதி தாரிகுஸ்ஸலாத்

### தொழுகையை விட்டவனுடைய வேதனையில் பேசும் பாடம்.

**காலல்லாஹு தஆலா பவைலுன் லில் முஸல்லீனல்லதீனஹும் அன் சலாதிஹிம் ஸாஹூன்:—** எனீ வைலு என்னும் ஓடையாகிறது தொழுகையை விட்டும் மறப்பார்களே அப்படிக் கொற்ற தொழுகைக் காருக்காயிருக்கு மென்று அல்லாஹு தஆலா திருவுளம் பற்றினன். முருதாவது வக்தை விட்டும் பிற்படுத்துவார்களே அவர்களுக்காயிருக்கும். அறிந்துக்கொள் வைலென்னும் ஓடையாகிறது ஜஹன்னம் என்னும் நரகத்தில் ஒருவோடை. அந்த ஓடையில் துன்யாவிலுள்ள மலைகளையெல்லாம் கொண்டுபோய் போடப்பட்டாலும் அம்மலைகள் தண்ணீர்போல் உருகிப்போம்.

ஹதீசு:—உமருப்னுல் கத்தாபு றழியல்லாஹு அன்அுவைத் தொட்டும் றிவாயத்துச் செய்யப்பட்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளம்பற்றினார்கள், யாராகிலுமொரு மனிதன் பாங்கு சத்தத்தை கேட்டஉடனே தொழுகைக்கு வரவில்லையானால் அல்லாஹுத் தஆலா அவனை கைசேதப்பட்டக் கூட்டத்தாருடனே எழுப்புவான். அவனை நரகத்தில் தள்ளி நரகவாதிகளுடைய ஊன் வென்னீரை அவன் காதில் ஊற்றி அல்லாஹுத் தஆலாவின் தொழுகைக்காக பாங்கு சொன்னதைக் கேட்ட உடனே வராமலிருந்தாயே அதற்காக இபபேர்க் கொற்ற துன்பமான அதாபைப் பெற்றுக்கொள் என்று மலக்குகள் சொல்லி அதாபு செய்வார்கள், என்று திருவுளம் பற்றினார்கள். றசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திருவுளம் பற்றினார்கள். தொழுகையாகிறது தீனுக்குத் தூணாயிருக்கும். யாராகிலுமொருவன் தொழுகையை நிலை நிறுத்தாட்டினால் தீனை நிலை நிறுத்தினான். தொழுகையை விட்டால் தீனை இடித்து விட்டான். ஒரு

அடியான் தொழுகையை விடுகிறதில்லை அல்லாஹுத் தஆலா அவனுடைய முகத்தில் இவன் அல்லாவுடைய றஹ்மத்தை விட்டும் புறப்பட்டவனென்று எழுதியே யொழிய வென்று. ஆகையால் அறிந்துக் கொள். யாராகிலுமொருவன் தொழுகையை விட்டால் நான் அவனை விட்டும் நீங்கினவனுயிருக்குமென்று திருவுளமானர்கள். என்னுடப் பிறந்தான் மார்களே! இந்த ஹதீஸை உங்களுடைய பயங்கரமென்னும் கண் கொண்டு பார்த்து உறுதிபெற்று தொழுகையளவில் விரைந்துக் கொள்ளுங்கள். அல்லாஹுத் தஆலாஉங்களுக்கு இருபதியிலும் கிருபை றஹ்மத்துச் செய்வானுகவும்.

## பாபுன் பீ புறூலிஸ்ஸலாத்.

### தொழுகையிலுள்ள பற்லுகளை பேசும் பாடம்.

தொழுகையில் ஷற்தென்னும் வெளி பற்லுகள் ஏழையும் றுக்னென்னும், உள்பற்லுகள் ஆறையும் பேசப்படும். இந்த பற்லுகளில் ஒன்றை தப்பி விட்டாலும் தொழுகை பஸாதாகும்.

---

### தொழுகையின் வெளிபற்லுகள் ஏழு.

1-வது:—தொழுகையின் வக்தறிகிறது. 2-வது:—சிறுதொடக்கு பெருந்தொடக்கை விட்டும் துப்புரவாயிருக்கிறது. 3-வது:—உடுமானம் முதலியவைகள் இருவகை நஜீசை விட்டும் துப்புரவாயிருக்கிறது. 4-வது:—நஜீசுகளை விட்டும் தொழும் தலம் துப்புரவாயிருக்கிறது. 5-வது:—அவ்றத்தை மறைக்கிறது. அதாவது:—ஆண்பிள்ளைகளுக்கு தொப்புளின் கீழ் அருகு முதல் முட்டுக்காலுக்கும் கீழ் வரையிலும், வெள்ளாட்டிக்கு அதுடன் வயிறும் முதுகும், நாட்டாமக்களுக்கு முகமும் இரு முன்கையும் இருபாதமும் தவிற மற்ற சரீரமடங்கலுமாயிருக்கும். 6-வது:—கிப்லாவை முன்னோக்குகிறது. எஃனீ கஃபதுல்லாவை அல்லது அதின் திசையை முன்னோக்கிறது 7-வது:—கலப்பறுதலாய் அல்லாஹுத் தஆலாவுக்காக தொழுகையை நாடுகிறே னென்று நிய்யத்துச் செய்கிறது.

### தொழுகையின் உள்பற்லுகள் ஆறு.

1-வது:—தக்பீற் தஹ்ரிமா, அதாவது:—நிய்யத்துடன் சேர்த்

துச் சொல்லும் முதல் தக்பீற் 2-வது:—நிலை அதாவது நிற்க திராணி பெற்றவன் பற்ளிலும் வாஜிபிலும் பஜ்ருடைய சுன்னத்திலும் நிலை நிற்கிறது 3-வது:—கிறுஅத்து அதாவது, பற்ளுடைய றண்டு றகஅத்திலும், வாஜிபு சுன்னத்து முஸ்தஹப்பு முதலிய தொழுகைகளின் எல்லா றகஅத்திலும் கிறஅத்து ஓதுவது. 4-வது:—ருகூஉ செய்கிறது, அதாவது இரண்டு கையையும் நீட்டினால் முட்டுக்கால் வரையும் படுமென்கிற வரையில் குனிகிறது, 5-வது:—இரண்டு சுஜூது செய்கிறது. அதாவது பூமியின் பேரில் அல்லது பூமியைச் சார்ந்திருக்கிற கண்டிப்பான வஸ்துவின் பேரில் நெற்றியை தரிப்பட வைக்கிறது 6-வது:—பின்னிருப்பு. அதாவது, தொழுகையின் கடைசியில் அத்தஹிய்யாத்தை **அப்துஹூ வறஸூலுஹூ** ஓதுகிறவரை தாமதிக்கிறது.

## தொழுகையின் வாஜிபுகள் இருபத்தொண்ணு.

1-வது:—பாத்திஹா ஓதுகிறது. 2-வது:—அதுடன் ஒரு சூறத்தை அல்லது மூன்று ஆயத்தை அல்லது ஒரு பெரிய ஆயத்தைச் சேர்க்கிறது. 3-வது:—பாத்திஹாவை சூறத்துக்கு முன் ஓதுகிறது. 4-வது:—முந்தின இரண்டு றகஅத்திலே கிறஅத்தைக் குறிப்பாக்கிறது. 5-வது:—சுஜூதைப்போல் ஒரு றகஅத்தில் மடக்கி வரப்பட்ட செயலில் தற்தீபை பேணுகிறது. 6-வது:—ருகூஉக்காண கிறஅத்தை முப்படுத்துகிறது. 7-வது:—ருகூஉ சுஜூது இஃதிதால் இரண்டு ஸஜதாவுக்கு இடை இருப்பு ஆகியவைகளில் தரிப்படுகிறது. 8-வது முந்தின இருப்பு 9-வது:—இரண்டிருப்பிலும் அத்தஹிய்யாத்தோதுகிறது. 10-வது:—அந்தந்த பற்ளுகளையும், வாஜிபுகளையும், அதனின் தலத்தில் கொண்டு வருகிறது. 11-வது:—முந்தின இருப்பில் **அப்துஹூ வறஸூலுஹூ**க்குப் பின்னால் ஸலவாத்தை யோதாமலிருப்பது. 12-வது:—இமாமுடைய பற்ளான செயலில் முக்ததீ தொடருவது. 13-வது:—இமாமுக்குப் பின் முக்ததீ கிறுஅத்தோதாமலிருக்கிறது. 14-வது:—இரைந்தோதும் தலத்தில் இரைந்தோதுகிறது. 15-வது:—அமர்ந்தோதும் தொழுகையில் அமர்ந்தோதுகிறது. 16-வது:—வித்ரில் மூன்றாவது றகஅததின் ருகூஉக்கு முன் குனூத்தோதுகிறது. 17-வது:—இரண்டு பெருநாள் தொழுகையிலும் ஒவ்வொரு றகஅத்திற்கும் அதிகமாக மும்மூன்று தக்பீற் சொல்லுகிறது. 18-வது:—அத்தொழுகையுடைய இரண்டாம் றகஅத்தின்

ருகூஉக்குப் போகிறதற்காக தக்பீற் சொல்லுகிறது. 19-வது:— அந்தந்த பற்லே அதகின் தானத்தில் கொண்டு வருகிறது. 20-வது:-- வாஜிபுகளே அதகின் தலத்தில் கொண்டு வருகிறது. 21-வது:-- தொழுகையின் கடைசியில் இரண்டு ஸலாம் சொல்லுகிறது.

## தொழுகையின் சுன்னத்துகள்.

தொழுகையின் சுன்னத்துகளாவது. தக்பீற் தஹ்ரீமாவுக்காகவும், குனூத்துக்காகவும், பெருநாளேயின் தக்பீருக்காகவும், இரு கையை உயர்த்துவதும், விரல்களே பாத்துவதும், தக்பீற் கட்டும்போது தலையை தாள்த்தாமலிருக்கிறதும், தக்பீற்களே இமாம் இரைந்து சொல்வதும், ஸனா, அஊது, பிஸ்மி, ஆமீன் இவைகளே அமர்ந்தோதுவது மாயிருக்கும். இன்னும் வலது கையை இடது கையின் பேரில் வைத்து அதுகளேத் தொப்புளுக்கு கீழ் வைப்பதும் ஹலரில் வக்து விஸ்தீனமாயிருக்கும்போது பஜ்றிலும், லுஹறிலும், (திவாலுல் முபஸ்ஸல்) எஃனீ சூறத்துல் ஹுஜ்ருத்து முதல் சூறத்து புருஜ் வரையிலுள்ள சூறத்தில் நின்றும், அஸ்றிலும், இஷாவிலும், (அவ்ஸாத்துல் முபஸ்ஸல்) எஃனீ சூறத்து புருஜ் முதல் சூறத்து லம்யகு வரையிலுள்ள சூறத்தில் நின்றும் மக்ரிபில் (கிஸாருல் முபஸ்ஸல்) எஃனீ சூறது லம்யகு முதல் ஒடுக்கம் சூறத்துன் னூஸ்வரையிலுள்ள சூறுக்களில் நின்றும் ஓதுகிறதும், ருகூஉடைய தக்பீரும் அதில் ஸுப்ஹான றப்பியல் அலீம், என்று தஸ்பீஹை மூன்று விடுத்தம் சொல்லுவதும் இரண்டு முட்டை இரண்டு கையினல் பிடிப்பதும், விரல்களே விரித்துக் கொள்வதும் தனித்து தொழுகிறவனும் இமாமும் ருகூஐ விட்டெழும்போது ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா, என்று ஓதுவதும், மாமூமும் தனித்துத் தொழுகிறவனும் உயர்ந்தபின் அல்லாஹும்ம றப்பனு லகல் ஹம்து, என்று சொல்வதும், சுஜூதுடைய தக்பீறும் அதில் ஸுப்ஹானறப்பியல்அஃலா,வென்று மூன்று தரம் தஸ்பீஹ் ஓதிவதும் அதைவிட்டெழும்போது தக்பீற் சொல்வதும், ருகூஇல் சுஜூதில் ஆண்பிள்ளே வயற்றை துடையை விட்டும் முளங்கையை பூமியை விட்டும் நெருக்கமில்லாத தலத்தில் கொடுங்கையை விலாவை விட்டும் அகட்டிக் கொள்வதும், அத்தஹிய்யாத்தில் வலது காலே நட்டி இடது காலே விரித்து அதின் பேரிலிருப்பதும், பின்னிருப்பில் அத்தஹிய்யாத்துக்குபின் ஸலவாத்தும் துஆவும் ஓதுவதும் சலாமுக்காய் முகத்தை வலமிடம் திருப்புவதுமாயிருக்கும்.

இந்த சுன்னத்துகளில் சிலதில் பெண்பிள்ளைகள் விதர்ப்பமாவார்கள் அதாவது:—அவர்கள் முந்தின தக்பீர் கட்டும்போது கைகளை காதுக்கு சமீபமாய் உயர்த்தாமல் புயத்துக்கு நேரே உயர்த்துவதும், நெஞ்சின்பேரில் இருகையை வைப்பதும், ருகூஇல் விரல்களை விரிக்காமல் முட்டை இரண்டு கையால் பொதிந்துக்கொள்வதும், ருகூஇல் சுஜூதில் சொடுங்கையை விலாவோடும் வயிற்றைத் துடையோடும் சேர்த்துக் கொள்வதும் இருமுளங்கையையும் பூமியோடு பணிய வைத்துக் கொள்வதும், அத்தஹிய்யாத்தில் இரண்டு காலையும் வலது பக்கம் விட்டு சவனத்தின் பேரில் இருப்பதுமாம்.

## தொழுகையின் முஸ்தஹப்புகள்.

தொழுகையின் முஸ்தஹப்புகளாவது:—நிலையில் நிற்கும்போது சுஜூதின் தலத்தளவிலும், ருகூஇலிருக்கும் போது இருபாதத்தின் முதுகளவிலும், சுஜூதிலிருக்கும்போது மூக்கின் நுனியளவிலும் இருப்பில் இருக்கும்போது மடியளவிலும், முந்தின ஸலாம் சொல்லும்போது வலது தோட் புயத்தளவிலும், இரண்டாவது ஸலாமில் இடது தோட்புயத்தளவிலும் பார்க்கிறதும் கொட்டாவிவிடும்போது வாயைத் திறக்காமல் இரண்டு உதட்டையும் பல்லைக்கொண்டுப்பிடித்துக் கொள்கிறதும் அல்லது தடுத்துக் கொள்கிறதும், எலாவிட்டால் இடதுகை முதுகினால் அல்லது சட்டைக் கையினால் வாயை மூடுவதும், தக்பீர் தஹ்ரிமாவுக்கு கையை உயர்த்தும்போது முன்கையைச் சட்டையைவிட்டும் நீக்கிக் கொள்வதும், இருமலை இயன்றமட்டும் தட்டுகிறதும், ஹய்ய அலல்பலாஹ், என்று சொல்கிற நேரத்தில் இமாம் ஜமாஅத்துகள் எழும்புகிறதும், **கத்காமதிஸ்ஸலாத்**, என்று சொல்லும்போது இமாம் தொழுகையில் துடங்குகிறதும், கடைக் கண்ணால் வலமிடம் பாராமலிருக்கிறதும், மூன்று ஆயத்துக்கு அதிகமாக ஓதுகிறதும், ருகூஇல் முதுகையும் தலையையும் சரியாகவைப்பதும், சுஜூது செய்யும்போது முதல் இருமுளந்தாள் பின்பு இருகை பின்பு மூக்கு பின்பு நெற்றி இவ்வொன்றாய் வைப்பதும், நிலையில் வரும்போது அதற்கு மாற்றமாக முதல் நெற்றி பின்பு மூக்குபின்பு இருகை பின்பு இரு முளந்தாள் இவ்விதம் எடுப்பதுமாம். பெண்பிள்ளைகள் சட்டைக் கையை விட்டும் இரண்டு முன் கையையும், நீக்காமலிருப்பது அதபாம்.

## தொழுகையை முறிக்கும் கருமங்கள்.

தொழுகையை முறிக்கும் கருமங்களாவது:—தொழுகையிலிருக்கும்போது யாதொன்றைதின்றாலும், குடித்தாலும், பேசினாலும், தொழுகையை முறித்துவிடும். அது கொஞ்சமானாலும், அல்லது மறதியாகவானாலும் சரியே. ஆனால் பல்லுகளுக்கிடையில் ஒருகடலை மட்டுக்கு இருந்து அதை விளுங்கி விட்டால் முறிக்காது. இன்னும் தங்கடமின்றி கனைக்கிறதில் தும்முகிறதில் அல்லது இருமல் எப்பம்கொட்டாவி இவைகளில் இரண்டு ஹர்புகள் உண்டாகி விட்டால் முறிந்துபோம். தங்கடத்தினாலுண்டானால் முறியாது. இன்னும் தொழுகையை இணக்கமாக்குவதன்றிஅதன் இனமில்லாதமிகுந்தசெயலினால் தொழுகை முறியும். மிகுந்த செயலென்பது தூரத்தில் நின்றொருமனிதன் பார்த்தால் தொழுகையில் இவன் இல்லை என்பதில் ஷக்காகமாட்டானே அப்படிக் கொற்ற செயலாயிருக்கும். ஒரு சொல்படி ஒரு பற்றில் துடர்ச்சியாக மூன்று செயல் செய்கிறதாயிருக்கும். இன்னுமொருவன் தும்மலுக்கு றஹீமகல்லா, என்று இவன் பிரத்திச்சொன்னாலும், தன்னுடைய இமாமைத் தவிர மற்றொருவன் பிசகாயோதும்போது சொல்லிக் கொடுத்தாலும், குர்ஆனைப் பார்த்தோதினாலும், தங்கடமின்றி நெஞ்சு கொண்டு கிப்லாவை மாறினாலும், முக்ததியல்லாதவன் சொல்லிக் கொடுத்ததை எடுத்தோதினாலும், துன்யாவின் தீங்கை நினைத்து சத்தமிட்டு அழுதாலும், தக்பீறை இரைந்துச் சொல்லென்று ஒருவன் சொன்னதைக் கேட்டு இரைந்து சொன்னாலும் தொழுகை பஸாதாகிவிடும்.

## தொழுகையின் மக்றூஹ்கள் பதினாறு.

தொழுகையில் மக்றூஹ் தஹ்ரீம் பதினாறாயிருக்கும். 1-வது:-தன்பிடவையை அணியாமல் தலைமேல் தோள் மேல் போட்டு சோரவிடுகிறது. 2-வது:—சுஜூதுக்கு போகும்போது முன்னால் அல்லது பின்னால் பிடவையை உயர்த்துகிறது. 3-வது:—மலம் ஜலம் காற்று இவைகளை அடக்கிக் கொண்டு தொழுகிறது. 4-வது:—விரல்களை நெற்றி விடுகிறது. 5-வது:—இடுப்பில் கையைவைத்து நிற்கிறது. 6-வது:—முகத்தை வலமிடம் யாதொரு உஸ்ரன்றி திருப்புகிறது. 7-வது:—ஆண்பிள்ளை முளங்கையை சுஜூதில் படுக்க வைத்துக் கொள்கிறது. 8-வது:—மனிதரின் முகத்திற்கெதிரே தொழுகிறது 9-வது:—நர்பிருப்பு இருக்கிறது. 10-வது:—கொட்டாவி வந்தால்

அதை விழுங்காமல் அல்லது வாயை மூடாமல் மனமுறண்டாக விடுகிறது 11-வது,—வாயையும் மூக்கையும் வீணுக்கு மூடிக்கொள்கிறது. 12-வது:—சரீரத்தையும் பிடவையையும் தங்கடமன்றி உலுப்பி விளையாடுகிறது. 13-வது:—ஒரு முளமான மேட்டின் உயரத்தில் இமாமும் பள்ளத்தில் ஜமாஅத்தும் யாதொரு தங்கடமின்றி நிற்கிறது. 14-வது:—உயிர்ப்பிராணியின் ரூபமுள்ள பிடவையை அணிகிறது 15-வது:—திர்ஹமுடைய கனத்த நஜீசுபட்டிருப்பதை தெரிந்துகழுகாமல் தொழுகிறது. 16-வது:—முந்தின சப்பில் இடமிருக்க பின்தின சப்பில் நிற்கிறது. ஆனபோதே இந்த மக்றூஹ தஹ்ரீம்களில் ஒன்றுண்டாயிருப்பதுடன் தொழுகையை நிறைவேற்றினால் தொழுகையை மீளவைப்பது வாஜிபு.

## ஸஜ்தா, ஸஹ்றவின் பயான்.

ஸஜ்தா ஸஹ்வாகிறது:—எந்த தொழுகையாவது தொழும்போது அதன் வாஜிபுகளில் ஒரு வாஜிபை இமாமானவன் அல்லது தனித்துத் தொழுகிறவன் ஞாபகத்தோடு விட்டாலும் ஸஹ்வு நேரிட்டு ஸஜ்தா ஸஹ்வை செய்யாமல் விட்டாலும் மக்றூஹ தஹ்ரீமுடன் தொழுகை நிறைவேற்றப்பட்டாலும், அத்தொழுகையை திருப்பித் தொழுகிறது வாஜிபு. இனி வாஜிபுகளை மறதியாகவிட்டாலும், பர்லு வாஜிபுகளை மடக்கிச் செய்தாலும் அதுகளைப் பிப்படுத்தினாலும், ஸஜ்தாஸஹ்வு செய்வது வாஜிபாம்.

ஸஜ்தா ஸஹ்வுசெய்யும் பரிசாவது:-பிந்தின இருப்பில் அத்தஹிய்யாத்து ஓதியபின் வலதுபுறம் ஸலாம் சொல்லி ஸஹ்வுடைய இரண்டு ஸஜ்தா செய்து அத்தஹிய்யாத்து ஸலவாத்து துஆ ஓதியபின் இரண்டுபுறம் ஸலாம் சொல்லவும். இமாமுடன் தொழுகிறவன் தன் பேரில் ஸஹ்வு நேரிடாதிருந்தாலும், இமாம் ஸஹ்வு ஸஜ்தா செய்வதற்காக தானும் கூட செய்வது வாஜிபா யிருக்கும்.

——()——

# பாபுன் பீ. சைபியதிஸ்ஸலாத்.

## தொழுகிற ஒழுங்கை பேசும் பாடம்.

அதாவது:-ஒருவன் தொழுகையில் புகுதகாதினால் முன்சொன்னது போல் சிறுதடக்கு பெருந்துடக்கை விட்டும் துப்புரவாகி இடத்தையும் சரீரத்தையும் பிடவையையும் நஜீசைவிட்டும் துப்புரவாக்கிய

பின் உறுப்புகளை ஹறாமான பார்வை கேள்வி கோள் புரம் பொய்
இவைகள் போல் கொற்றதை விட்டும் துப்புரவாக்கி இருப்பதுடன்
கல்பை வஞ்சகம் மோசம் பெருமை சூது வினையம்போல் கொற்றதை
விட்டும் துப்புறவாக்கி பாவங்களை விட்டும் தவுபா செய்து துன்யா
வின் பராக்களவில் காட ஒட்டாமல் இயன்ற மட்டும் கல்பை தடுத்து
இபாதத்தை அல்லாவுக்காக கலப்பருதலாக்கி நிய்யத்துச் செய்து கிப்
லாவுக்கு நேராக நின்று ஆண்பிள்ளையானவன் இருமுன்கையையும்
இரண்டு சட்டைகையை விட்டு புறப்படுத்தி இரண்டு பெருவிரலைக்
கொண்டும் இருகாதின் சோணையை தொட்டவனாக இரண்டு கையையும்
உயர்த்தி இரு முன்கையின் உள்புறத்தை கிப்லாவுக்கு நேராக்குவான்
பெண்பிள்ளையானவள் தன் விரல்களின் தலைகளை இரண்டு தோட்புயத்
துக்கு நேராகும் புறம் கொண்டு உயர்த்துவான். பின்பு அந்த நிய்
யத்துடன் **அல்லாஹு அக்பர்**, என்று தக்பீற் சொல்லி நிலையில் இரு
பாதத்துக்குமிடையில் நாலுவிரல்மட்டும் இடைப்போட்டு நின்று தக்
பீற் சொன்னவுடன் இடதுகை மணிக்கட்டைவலதுகை சின்னிவிரலைக்
கொண்டும் பெருவிரலைக் கொண்டும் வளையமிட்டு பிடித்தவனாகவும்
மற்ற மூன்று விரலையும் இடது புறங்கைமீது நீட்டி பரத்தினவனாக
தொப்புளுக்கு கீளாலே வைப்பான். பெண்பிள்ளை முளங்கை விலா
வில் சேர்ந்ததாக விரலை வளையமிட்டுப் பிடிக்காமல் இடது முன்கையின்
பேரில் வலது முன்கையை நெஞ்சின் பேரில் வைப்பாள். பின்பு ஸனா
வும் அஊதும் பிஸ்மிலும் அல்ஹம்தும் ஓதி ஆமீன் சொல்லி ஒரு
சூறத்து அல்லது ஒரு பெரிய ஆயத்து அல்லது சிறிய மூன்று ஆய
த்து ஓதவும். முக்ததியானவன் ஸனாவையும் ஆமீனையுந் தவிர வே
றொன்றையும் ஓதக்கூடாது. ஆனால் கிறுஅத்தை இமாம் இரைந்தோ
தும்போது வந்து சேர்ந்த முக்ததீ ஸனா ஓதமாட்டான். மஸ்பூகான
வன் தனக்கு முந்தி விட்டதை தொழுகிறதற்காக எழும்பினபோதும்
ஸனா ஓதுவான் பின்பு கிறுஅத்து முடிந்த உடன் **அல்லாஹு அக்பர்**,
என்று சொன்னவனாக றுகூஉ செய்யவும் றுகூஇல் பார்வையை கால்
மீது வைத்து விரல்களை நல்லாக விடுத்து முட்டுக்காலைப் பிடித்து
இரண்டு பறண்டை மொழியையும் சேர்த்து முதுகு தலைப்பித்தட்டு
இவைகளை சரியாக வைக்கவும் பெண்பிள்ளை சரீர மெல்லாம் சேர்த்து
முட்டுக்கால் வளைந்திருக்க விரல்களைப் பிரிக்காமல் முட்டுக்கால் எடுக்
கிறமட்டும்வைப்பாள் றுகூஇல் மூன்றுதரம் அல்லது அதற்கதிகம் ஒற்
றைப்பட்ட **ஸுப்ஹான றப்பியல்அலீம்**, என்று தஸ்பீஹ சொல்லவும்

இமாம் **ஸமிஅல்லாஹுலிமன்ஹமிதா**,என்று சொன்னவனாகஎழும்பி னால் முக்ததீ **அல்லாஹும்ம றப்பனா லகல் ஹம்து** அல்லது றப்பனா **லகல்ஹம்து** என்று சொல்லவும்: தனித்துத் தொழுகிறவன் உயரும் போது தஸ்மீஉம் நிலையில் வந்தபின் தஹ்மீதும் சொல்வான். பின்பு சுஜூதுக்கு குனியும் போது **அல்லாஹு அக்பற்**, என்ற சொல்லைத் துவக்கி நெற்றியை வைக்கும்போது முடிக்கவும். அதில் முந்தி இரண்டு முட்டுக்காலையும் பின்பு இரண்டு கையையும் பின்பு மூக்கையும் பின்பு நெற்றியையும் வைத்து கைவிரல்களை விரியாமல் கிப்லா பக்கமாக பெருவிரல்காதுக்கு சரியாகவும்கால்விரல்களின் நுனிகள் கிப்லா பக்கமிருக்கும்படி பாதத்தை நிறுத்தி இரண்டு கொடுங்கையை விலாவைவிட்டும் வயிற்றை இருதுடையை விட்டும் அகட்டிப் பார்வையை மூக்கின் மீதும், கன்னத்தின் மீதும், வைத்து இரு முன் கையுக்கு மிடையில் நெற்றியை வைத்து சரீரத்தின் கனம் ஏழு உறுப்புகளின் மீது பொறுக்க வைத்து சுஜூது செய்வான். பெண்பிள்ளைகள் கொடுங்கையை விலாவோடும் வயிற்றைத் துடையோடும் சேர்த்தவளாக சுஜூது செய்வாள். அதில் **ஸுப்ஹான றப்பியல் அஃலா**, வென்று ருகூஇல் சொல்லிய கணக்குப்படி தஸ்பீஹ் செய்து தக்பீற் சொன்னவனாக தலையை உயர்த்தி முளங்கால் மீது கையை வைத்து அத்தஹிய்யாத்து இருப்பைப் போலிருந்து ஒரு தஸ்பீஹ் மட்டுக்கு தரிப்பட்டு தக்பீற் சொன்னவனாக இரண்டாம் சுஜூதையும் முந்தின சுஜூதைப் போல் செய்து முடித்தபின் இருப்பிலிருக்காமல் தக்பீற் சொன்னவனாக முதல் நெற்றி பின்பு மூக்கு கை முட்டுக்கால் இவ்வொழுங்கின் படி உயர்த்தி எழும்பி நிலையில் வந்து ஸனாவும் அஊதும் ஓதாமல் இரண்டாம் றகஅத்தையும் முந்தின றகஅத்தைப் போல் தொழவும், இரண்டாம் றகஅத்துடைய இரண்டு சுஜூதையும் விட்டெழுந்து வலது காலின் விரல்கள் கிப்லா பக்கமிருக்கும்படியாக நட்டி இடது காலை விரித்து இரண்டு சவனத்துக் கிடையிலாக்கி அதின் பேரிலிருந்துக் கொண்டு விரல்களின் நுனி முட்டுக்காலுக்கு முடுகுதலாக விருக்கும்படியாக இரண்டு துடையின் பேரிலும் இருகையை வைத்து இருப்பான். பெண்பிள்ளைகள் இருகாலையும் வலது புறத்திலாக்கி இடது சவனத்தின் பேரிலிருப்பாள். பின்பு எல்லோரும் பார்வையை மடிமீதுவைத்து அத்தஹிய்யாத்தை **அப்துஹு வறசூலுஹு**, வரையில் ஓதுவார்கள். இனி அத்தஹிய்யாத்தென்று ஓதும் போது அல்லாஹு தஆலாவுக்குக் காணிக்கை வைக்கிறதாகவும்

அஸ்ஸலாமு அலேக்க, வென்று ஓதும்போது நபிசல்லல்லாஹு அலே ஹிவசல்லம் அவர்கள்பேரில்ஸலாம் சொல்லுகிறதாகவும், அஸ்ஸலாமு அலேனு வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன், என்று சொல்லும் போது தன் பேரிலும் வானம் பூமியிலுள்ள ஸாலிஹான அடியார்கள் பேரிலும் ஸலாம் சொல்லுகிறதாகவும், அஷ்ஹது, வென்ற போது சாக்ஷி சொல்கிறதாகவும், நிய்யத்துச் செய்துக் கொள்ளவும் இன்னும் அஷ்ஹது, வென்ற சொல்லிடத்தில் கலிமாவிரலுக்கடுத்த மூன்று விரலேயும் மடக்கி பெருவிரல் தலேயை கலிமாவிரலின் நடு மொழியில் வைத்து லாஇலாஹ,வென்று சொல்லும்போது கலிமாவிரலே உயர்த்தி இல்லல்லாஹ், வென்றசொல்லிடத்தில் அவ்விரலேவைத்து இவ்விதம் சைக்கினேச் செய்யவும். பற்ஷிலும் வித்ரிலும் ருதிபான சுன்னத்து களிலும் முந்தின இருப்பில் அப்துஹு வறசூலுஹு, என்றதற்கு அதிகம் ஓதமாட்டான். பற்ஷில் பிந்தின இரண்டு றகஅத்திலும் பாத்திஹா மட்டும் ஓதவும். ஆனல் அதில் பாத்திஹா அல்லது மூன்று தஸ்பீஹ் அல்லது வாய்மூடி நிற்கிறது இந்த மூன்றுக்கிடை யில் அவனுக்கு இக்தியார் உண்டாயிருப்பதில் பாத்திஹா ஓதுாது முஸ்தஹப்பாயிருக்கும். பின்பு இரண்டாம் இருப்பிலும் முந்தின இருபபின் ஒழுங்குபடியிருந்து அத்தஹிய்யாத்து ஓதியபின் ஸலவாத் தும் துஆவும் கன்னத்தின் வெள்ளேயை பின்னுல் இருப்பவர்கள் காணும்படி வலதுபுறம் முகத்தை திருப்பி தனித்துத் தொழுகிறவன் மலக்குகளே நிய்யத்துச் செய்தவனுகவும் இமாம் தன்னுடன் சேர்ந்த கவ்முகளேயும் நிய்யத்துச் செய்தவனுகவும் முக்ததியானவன் இமாம் ஜமாஅத்து மலக்குகள் முதலானவர்களே நிய்யத்துச் செய்தவனுகவும் தஹ்ரீமாவைப் போல் இமாமுடன் அஸ்ஸலாமு அலேக்கும் வறஹ்மது துல்லா, என்று சலாம் சொல்லி அதுபோல் இடதுபுறமும் ஸலாம் சொல்லி முடிக்க வேண்டும்.

(பறஃ) பற்ஷுக்குப் பின்னுல் சுன்னத்தான தொழுகை இல்லா விடில் இஸ்திக்பாற் செய்யவும். சுன்னத்து உண்டாயிருந்தால் அல்லா ஹும்ம அந்தஸ்ஸலாம் வமின்கஸ் ஸலாம் தபாறக்த யாஸல் ஜலாலீ வல்இக்றாம், போலொற்ற சிறிய துஆ ஒன்று வோதி எழுந்திருந்து கொஞ்சம் நகண்டு நின்று சுன்னத்துத் தொழுதுமுடித்து விட்டு இஸ் திக்பாற் செய்யவும்.

இஸ்திக்பாருவது:—அஸ்தக்பிருல்லாஹல் அலீம். அல்லதீ லாஇ லாஹ இல்லா ஹுவல் ஹய்யுல் கய்யூம். வஅதூபு இலைஹி என்று மூன்று விடுத்தம் சொல்லி பின்பு அல்லாஹு லாஇலாஹ இல்லா ஹுவல் ஹய்யுல் கய்யூம். லாதஃகுதுஹு ஸின்துன் வலா நவமுன் லஹு மாபிஸ்ஸமாவாத்தி வமாபில் அற்லிமன் ஸல்லதீ யஷ்பஉ இந்தஹு இல்லாபிஇஸ்னிஹி யஃலமு மாபைன அய்தீஹிம் வமா கல்பஹும் வலா யுஹீதூன பிஷய்இன் மின் இல்மிஹி இல்லா பிமாஷாஅ வஸிஅ குற்ஸிய்யுஹுஸ் ஸமாவாத்தி வல்அற்ல வலா யஊதுஹு ஹிப்லுஹுமா வஹுவல் அலிய்யுல் அலீம் பின்பு குல்ஹுவல்லாஹு-குல்அஊது பிறப்பில் பலகி-குல்அஊது பிறப் பின்னுஸ்-இம்மூன்று சூறுவையும் ஒவ்வொரு விடுத்தம் வோதி ஸு ப்ஹானல்லாஹி 33 விடுத்தமும் அல்ஹம்து லில்லாஹி 33 விடுத்த மும் அல்லாஹு அக்பர் 33 விடுத்தமும் லாஇலாஹ இல்லல்லா ஹு வஹ்தஹு லாஷரீக்கலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலாகுல்லி ஷைஇன் கதீற். ஒரு விடுத்தமும் ஓத வும் பின்பு லாஇலாஹ இல்லல்லாஹ் வென்று 10 விடுத்தம் விக்கு சொல்லி இருகையையும் நெஞ்சுக்கு நேரே உயற்த்தி துஆ ஓதவும்.



## பாபுன் பீ பலீலதில் ஜமாஅத்தி.

### ஜமாஅத்துடன் தொழுகிற வருமையில் பேசும்பாடம்.

ஹதீஸ். றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமா னார்கள். ஒரு மனிதன் தன் வீட்டில் தனியே தொழுகிறதைக் காண பள்ளியில் ஜமாஅத்துடனே தொழுகிறது 25-தரஜா, ஒரு ரிவாயத் தில் 27-தறஜா அதிகமாக இருக்குமென்றும், ஒரு மனிதன் நாற்பது நாளைக்கு ஜமாஅத்துடனே முந்தின தக்பீரில் சேர்ந்து தொழுதால் அவன் நரகத்தை விட்டும் முனபிக் தனத்தை விட்டும் நீங்கி விட்டான் என்று இரண்டு உரிமைச் சீட்டு எழுதப்படுமென்றும் அல்லாஹு தஆலாவும் அவனுடைய மலக்குகளும் ஸப்புகளின் பேரில் சலவாத்துச் சொல்வார்கள். உங்கள் சப்புகளை நெருக்கி வையுங்கள் உங்களுடைய கைகளை ஒருவருக் கொருவர் இடிக்காமல் மெல்லினமாக்கி வையுங்கள். இடையில் ஷைத்தான் நுழையாம லிருக்கிறதற்காக இடைகளை அடைத்துக் கொள்ளுங்கள். யாராவது

இடைகிடந்ததை தேடிப்பார்த்து அடைத்து நிறப்பானே யானால் அவனுக்கு அல்லாஹுத்தஆலா ஒரு தரஜாவை உயர்த்திவிடுவான் என்றும், உங்களி லொருவன் இமாமுக்கு முன்பாக தலையை உயர்த்தினல் அல்லது வைத்தால் அவன் தொழுகையை அல்லாஹுத்தஆலா ஒப்புக்கொள்ள மாட்டான் என்றும், ஒருசப்பை ஒருமனிதன் சேர்ந்தால், அவனை அல்லாஹுத் தஆலா சேர்த்துக்கொள்வான். முறிந்தால் அவனை அல்லாஹுத் தஆலா முறித்துவிடுவான் என்று திருவுளமானார்கள்.

(ஹதீஸ்) ஒருநாள் அப்துல்லாஹிப்னு உம்மி மக்தூம் றலியல்லாஹு அன்ஹு நபிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களிடம் வந்து அல்லாவுடைய றசூலே! இந்த மதீனமோ புளுப்பூச்சிகள் மிகுதமாகவும் அய்வாய் மிருகங்கள் அதிகமாகவு மிருக்கிறது, நானோ கண் தெரியாதவனுகவும் விடுதூர மானவனுகவு மிருக்கிறேன். ஆனால் எனக்கொரு கோல்காட்டி யிருந்தும் சில நேரங்களில் எங்கேயாவது போய்விடுகிறான். எனக்குஇவ்வித தொந்திரவு யிருப்பதால் நான் ஜமாஅத்தை விட்டு வீட்டில் தொழும்படி உத்திரவுஉண்டா? வென கேட்டதற்கு உமக்கு பாங்குசப்தம் கேட்குமா? வென்று நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கேட்டார்கள். அதற்கு ஆமென்றார். உடனே உமக்கு ஜமாஅத்தைவிட வுத்திரவில்லை. ஜமாஅத்துக்கு ஹாஸிருக வேண்டுமென்று நபிநாயகம் திருவுளம் பற்றினார்கள். ஆனதைப்பற்றியே இமாம் ஜமாஅத்துடன் தொழுகிறது ஆண்பிள்ளைகளுக்கு பிலவந்தமான சுன்னத்தாயிருக்கும். மேலும் பிலமான சொல்படி வாஜிபாகவிருக்கும். இனி ஜமாஅத்தில் குறைந்தது ஒரு முக்ததியும் இமாமுமாயிருக்கும். ஆனபோதே ஒரு முக்ததியைக்கொண்டு ஜமாஅத்துடைய வுருமை உண்டாகிவிடும். ஒவ்வொரு முக்ததீ ஆகிலாகிய சிறு பிள்ளையானுலும் பெண்பிள்ளை யானுலும் வீட்டிலானுலும் ஒக்கும்.

## இமாமுக்கு ஷர்த்துகள் ஆறு.

1-வது:—இஸ்லாமாயிருக்கிறது, 2-வது:—பாலிகா யிருக்கிறது, 3-வது:—ஆகிலா யிருக்கிறது, 4-வது:—ஆண்பிள்ளையா யிருக்கிறது, 5-வது:—தொழுகை கூடுகிறமட்டில் குறுஆனில் பாடமாயிருக்கிறதும், ஹற்பை பேதகமாக்கும்படி நாவின் கெடுதலையை விட்டும் ஸலாமத்தாயிருக்கிறது, 6-வது:—வெயிற்றோட்டம் போலொற்ற மற்றும் எந்த தங்கடங்களை விட்டும் ஸலாமத்தா யிருக்கிறது.

## இமாமை துடர்வதற்கு ஷற்த்துகள் பத்து.

1-வது:—இமாமை துடர்வதை முக்ததியானவன், நிய்யத்துச் செய்கிறது. 2-வது:—இருவருடைய தலமும் ஒன்ருயிருக்கிறது. 3-வது:—இருவர் தொழுகையும் ஒன்ருயிருக்கிறது 4-வது:—முக்ததியுடைய எண்ணத்தில் இமாமுடைய தொழுகை துரிஸ்தாயிருக்கிறது. 5-வது:—தொழுகையில் பெண்பிள்ளையுடைய பாதம் அவனுடைய எந்த ஒருபக்கம் முன்னுலேயாவது, வலதுபக்கம் இடதுபக்கமாவது திறையன்றியே நேர்படாமலிருக்கிறது. 6-வது:—முக்ததீயின் குதிகால் இமாமுடைய குதிகாலேக்காண முந்தாமலிருக்கிறது. 7-வது:--இமாமுடைய திரும்புதல்களை அவரைக்காண்கிறது கொண்டு அல்லது அவருடைய சப்தத்தைக்கொண்டு அல்லது முக்ததீகளில் சிலரை காண்கிறது கொண்டு அறிகிறது. 8-வது:—தொழுததின்பின் அல்லது முன் இமாமை முகீம் அல்லது முஸாபிரென்றரிகிறது. 9-வது:—இமாம் பருவுகளை செய்யும்போது முக்ததீ அவருக்கு முந்தாமல் அவருடன் அல்லது அவருடைய செயலின் பிறகடியில்செய்து வருகிறது. 10-வது:—ஷர்த்துகளை இறுப்பதில் முக்ததீ இமாமுக்கு சரியாக அல்லது அவருக்குத் தாழ்மையாய் இருக்கிறது.

## மக்றூஹான இமாம்கள்.

பாவிகெனும் விஞ, கள், வட்டி, இதுபோலான பெரும்பாவம் பகிரங்கமானவன் இமாமத்துச்செய்வது மக்றூஹு தஹ்ரீமாயிருக்கும். குருடனையும், அடிமையையும், இல்முஇல்லாத பட்டிக்காட்டானையும், விஞவில் பிறந்தவனையும், முகவறைகீருத அழகான வாலிபனையும், அல்ப புத்திக்காரனையும், பக்கவாதக்காரனையும், திரேகமெல்லாம் விஸரிய வெங்குட்டக்காரனையும், நொண்டியையும், குஷ்டவியாதிக்காரனையும், ஆண்உடம்பு தரிபட்டவனையும், மலம், ஜலம், காற்று, இவைகளை யடக்கிக்கொண்டு தொழுகிறவனையும், ஒற்றைக் கண்ணனையும், நம்முடைய மதஹபில் பறுவு, ஷறது, முறித்தல்; இவைகளை பேணுகிறது. ஷக்கான மத்ஹபுக்காரனையும், முற்படுத்துகிறதும், இவர்களாக முந்துகிறதும் மக்றூஹ். ஆனுல் இவர்களை தவிற ஏற்றமானவர்கள் கிடையாமல்போனுல் இவர்களுடைய இமாமத்து மக்றூஹல்ல. இன்னும் இந்த மக்றூஹ்கள் ஜமாஅத்துடைய ஸவாபை தட்டாது. ஆகையால் தனித்துத் தொழுகிறதைக்காண அவர்களுக்குப் பின்னுல் தொழுகிறது ஏற்றம்.

ஸப்புகளின் வரிசைகளைப் பேசல்.

அன்ஸு றலியல்லாஹு அன்ஹு அவர்களைத்தொட்டும் றிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் சொன்னார்கள்:—றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளம் பற்றினார்கள். உங்களுடைய ஸப்புகளைச் சரியாக்குங்கள். ஏனெனில் திட்டமாக சப்புகளைச் சரியாக்குகிறது தொழுகையைச் செவ்வையாக்கிறதில் நின்றுமாயிருக்கும் என்று இன்னும் அவர்களைத் தொட்டும் ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது. அவர்கள் சொன்னார்கள்:—றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளம் பற்றினார்கள். உங்களுடைய ஸப்புகளை நெருக்குங்கள் இன்னும் அவைகளுக்கிடையில் முடுகுதலாக்குங்கள். கழுத்துகளைக் கொண்டு நேராக்குங்கள். ஏனெனில் என்னுடைய நப்சு அவன் வசத்திலிருக்கிறதே அந்த நாயன்பேரில் சத்தியமாக திட்டமாக நான் ஷைத்தானை சப்பினிடையில் நின்றும் அவன்கறுத்த ஆட்டைப்போல் புகுதக்காணுகிறேனென்று, இதை அபூதாவூது ரிவாயத்துச் செய்தார்கள். ஆகையால் ஸப்பு நிற்கிறதில் இடைவழியை அடைத்து சிலரோடு சிலர் சேர்ந்து தோட்புயங்களைச் சரியாக்கவேண்டும் அதுகொண்டு இமாமும் அவர்களை யேவவேண்டும். இன்னும் ஸப்பு நிற்கிறதிற் முக்ததீ ஒருவனாயிருந்தால் அவன் சிறுப்பிள்ளை யானாலும் பெரியவனானாலும் இமாமுடைய வலதுபாகத்தில் இடைவிடாமலும் முந்தாமலும் பிந்தாமலும் குதிகாலைச் சரியாகவைத்து நிற்கவேண்டும்.



# பாபுன் பீஸலாத்தில் வித்ரி வன் னவாபில்,

## வித்று தொழுகையையும் நபிளான தொழுகையையும் பேசும் பாடம்.

சுன்னத்தான தொழுகைகளெல்லாம் நப்லென்று சொல்லலாம், நப்லான தொழுகைகளை சுன்னத்து என்று சொல்லப்படாது.

(ஹதீது) நபிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளம் பற்றினார்கள். இரவில் உங்களுடைய தொழுகையில் கடைசியானதை வித்ருக்கிக் கொள்ளுங்கள். வித்ரைக்கொண்டு சுப்ஹை முந்துங்கள். யாராகிலு மொருவன் இரவின் ஒடுக்கத்தில் நின்றும் அவன் எழும்பமாட்

டான் என்பதை பயந்தாகில் அதன் துவக்கத்தில் அவன் வித்ரு தொழவும். இன்னும் யாராகிலு மொருவன் அதன் ஒடுக்கத்தில் அவன் எழும்புவதை அவேழ்கையானுகில் இராவின் ஒடுக்கத்தில் அவன் வித்று தொழவும். ஏனெனில், உறுதியாக இராவின் ஒடுக்கத்தின் தொழுகையாகிறது ஹாலிருக்கப் பட்டதாயும் மிக வருசையானதாயு மிருக்கும் என்று திருவுளமானார்கள். இன்னும் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திருவுளமானார்கள். சிவந்த ஒட்டகத்தைக்காண கைருயிருக்குமே, அப்படிக்கொற்ற ஒரு தொழுகையைக்கொண்டு அல்லாஹுத் தஆலா உங்களுக்கு உபகாரஞ் செய்திருக்கிறான். அதாவது வித்ருயிருக்கும், அதை அல்லாஹுத் தஆலா இஷாவுக்கும் பஜ்ருக்குமிடையில் வைத்திருக்கிறான் யென்று திருவுளமானார்கள். இன்னும் நபிஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளம் பற்றினார்கள். மனிதர்களே! உங்களுடைய பற்லான தொழுகையின் கூலியை நிறப்பப்படுகிறதற்காக வேண்டி நப்லான வணக்கங்களை நிறைவேற்றி வாருங்களென்று திருவுளம் பற்றினார்கள். இன்னும் றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளமானார்கள்:—யாராகிலு மொருவன் என்னுடைய சுன்னத்தை யுவந்தால் என்னை யுவந்தான். என்னை யுவந்தவன் சொர்க்கத்தில் என்னுடனுயிருப்பான். இன்னும் ஒருரிவாயத்தில் என்னுடைய சுன்னத்தை விட்டவன் என்னில் நின்றும் உள்ளவனல்ல என்று திருவுளமானார்கள்.

## வித்ரு தொழுகையுடைய ஹுக்ம்கள்.

வித்ருத் தொழுகையாகிறது வாஜிபாயிருக்கும். வித்ருகிறது ஒரு ஸலாம்கொண்டு மூன்று றகஅத்தாக தொழவேண்டும். அதில் மூன்றும் றகஅத்துடைய ருகூஉக்கு முன்னாலே இரண்டு கையையும் முந்தின தக்பீருக்கு உயறத்துவதுபோல் உயறத்தி தக்பீர்சொல்லி கட்டி குனூதை அமர்ந்தோதியபின் ருகூஉக்கு தக்பீர்சொல்லி தொழுது முடிக்கவும். ஆனால் முந்தின றகஅத்து இமாமுடன் தவறின மஸ்பூகானவன் இமாமுடன் மாத்திரம் குனூத்தோத வேணும். றம்ஸானில் வித்ரை இமாம் ஜமாஅத்தாக தொழுகிறது சுன்னத்து மற்ற நாட்களில் மக்றூஹ். றம்ஸானில் இஷாவின் பற்லை அல்லது தறுவீஹை இவ்விரண்டி லொன்றையாவது இமாமுடன் தொழுதிருந்தால் மாத்திரம் வித்ரையும் இமாமுடன் தொழலாம்.



## பாபுன் பீபலாயிலித் தருவீஹ்,

### தருவீஹ்உடைய பெருமையை பேசும்பாடம்.

(ஹதீஸ்) றசூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளமா ருர்கள். யாராகிலு மொருவன் றம்ஸான் மாதத்திரவையில் முளித்து ஸவாபை தேடினவனுகவும், அதை உறுதிகொண்டவனுகவும், நல்லான வணக்கங்களை வணங்கினுல் அவனுடைய முந்தின பாவங்களை அல்லா ஹுத் தஆலா பொறுத்து விடுவான். இன்னும் அலிறலியல்லாஹு அன்ஹு சொன்னுர்கள்:—றசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் திருவுளமானுர்கள். அற்ஷைசுற்றி கலீறதுல் குத்ஸென்னும் ஒருதல முண்டாயிருக்கிறது அதில் மட்டில்லடங்காத மலக்குகள் இருந்து ஓயா மல் நாயனை வணங்குகிருர்கள். றமஸானுடைய இரவுகளானுல் பூமியில் இறங்கி ஆதமுடைய மக்களோடுதொழ நாயனிடத்தில் உத்திரவுகேட்டு எல்லா இரவிலு மிறங்குகிருர்கள். ஆகையால் அவர்களுடைய மேனி ஒருவனில் பட்டாலும் அல்லது ஒருவனுடைய மேனி அவர்களில் பட் டாலும் அவன் சீதேவித்தனம் பெற்றுப்போவான். அவனுக்கு மூதே விதனமே இல்லையென்று திருவுளமானுர்கள். இந்த ஹதீஸை அலீறலி யல்லாஹு அன்ஹுவில் நின்றும் உமறு றலியல்லாஹு அன்ஹு கேட்க்கவே இதர்க்கு நாம் மெத்த பாத்தியமென்று சொல்லி மனிதர் களை சேகரம்செய்து தராவீஹை நடத்தினுர்கள்.

### தருவீஹ் தொழுகையின் விவரம்.

தருவீஹ் தொழுகையாகிறது றமலான் மாதத்தில் ஒவ்வொரு இரவிலும் இருபது றகஅத்து தொழுகிறது ஆண்பிள்ளைகளுக்கும் பெண்பிள்ளைகளுக்கும் சுன்னத்து முவக்கதாவாயிருக்கும், எஃனி பிலவந்தமாக்கப்பட்ட சுன்னத்தாயிருக்கும். இதை இரண்டு றகஅத் தாக சலாம்சொல்லு மிடத்து இருபது றகஅத்தையும் நிறப்பமாக்கு கிறது மிகவும் ஏற்றமாக இருக்கும், அதை இமாம் ஜமாஅத்தாக தொழுகிறது சுன்னதுக் கிபாயாவா இருக்கும். அதினுடைய வக்தாகி றது இஷாதொழுதபின் கிழக்கு வெளுக்கிறவரையிலா இருக்கும், றமலான் மாதமடங்கலிலும் தராவீஹில் ஒருவிடுத்தம் குருஆன் முழு மையும் ஓதிமுடித்து கதம்செய்கிறது சுன்னத்தாயிருக்கும்.

### இஷ்ராக் தொழுகையுடைய விபரம்.

இஷ்ராக் தொழுகையாகிறது பஜ்ருதொழுதபின் பொழுது கிளம்புகிறவரையிலும் திக்றைகொண்டும் தஸ்பீஹை கொண்டும் பராக்கா

கிரதும் பொழுது ஒருவல்லயபிரமாணம் ஆனபின், இரண்டு றகஅத்து இஷ்ருக்தொழுகிறது முஸ்தஹப்பு.

## தஹிய்யதுல் மஸ்ஜிதின் விபரம்.

மஸ்ஜிதுக்குள் போனவுடன் தஹிய்யதுல் மஸ்ஜிதென்று இரண்டு றகஅத்து நிய்யத்துசெய்து தொழுகிறது சுன்னத்து இருக்கிறதர்குமுன்அதை தொழுகிறது எற்றமாயிருக்கும். அதை ஒருநாளைக்கி ஒருவிடுத்தம் தொழுதால் போதும்.

## ஒழுவின் தொழுகையுடைய விபரம்.

ஒலுசெய்து முடிந்தபின் அல்லது குளித்தபின் ஈரம் உணருமுன் ஒழுவின் நபில் என்று இரண்டு றகஅத்து நிய்யத்து செய்து தொழுகிறது முஸ்தஹப்பு

## ழுஹாதொழுகையின் விபரம்.

ழுஹா தொழுகையாகிறது முஸ்தஹப்பா இருக்கும். அதின் வைக்தாகிறது பொழுது உயர்ந்ததுமுதல் மதியமாகிறதர்கு கொஞ்சம் முன்வறையிலா இருக்கும் அதர்கு தெரிவுதலான வக்தாகிறது பகலில் நாலிலொரு பங்குக்குபின் சவாலுக்கு முன்னுலேயா யிருக்கும்.

## இஸ்திகாறு தொழுகையின் விபரம்.

இஸ்திகாறுவாகிறது ஒருகாரியம் நலவாகிறதை நாடினவனுக தொழுகிற தொழுகைக்கு சொல்லப்படும், இஸ்திகாறு இரண்டு றகஅத்து நிய்யத்துசெய்து தக்பீர்கட்டி முந்தின றகஅத்தில் **குல்யாஅய்யுஹல் காபிரூனேயும்** இரண்டாவது றகஅத்தில் **குல்ஹுவல்லாஹு அஹதும்** ஓதிதொழுது முடிந்தபின் நாட்டத்துக்கு தகுந்த சாளயப்பாடான துஆவை ஓதவும்,

## தஸ்பீஹு தொழுகையின் விபறம்.

தஸ்பீஹு தொழுகையாகிறதுநாலுறகஅத் முஸ்தஹப்பாயிருக்கும். மக்ரூஹான வைக்தை தவிற மற்ற நேறங்களடங்கலிலும் ஒரு இரவுபக லடங்களிலும் ஒருவிடுத்தம் தொழவும். எலாவிட்டால் கிழமையில் ஒருவிடுத்தம் அல்லது மாதத்தில் ஒருவிடுத்தம் அல்லது வருடத்தில் ஒருவிடுத்தம் அல்லது வயதில் ஒருவிடுத்தம் தொழவும். இதில் மிகுதமான தவாபுண்டா யிருக்கிறதென்று ஹதீதில் வந்திருக்கிறது.

## தஹஜ்ஜது தொழுகையின் விபரம்.

தஹஜ்ஜது தொழுகையைபற்றி அல்லாஹுத் தஆலா குருஆனில் திருவுளமானுன். வமினல்லைலி பதஹஜ்ஜத்பிஹி நாபிலதன் லக அசாஅன் யபஅதக றப்புக மகாமன் மஹ்மூதா எஃனி முஹம்மதே! இரவில் சிலதை குருஆன்ஓதி மேல் மிச்சமாக இருக்கிறஹாலில் தொழுவதர்காகவேண்டி நீர் உரக்கத்தைவிடும். உம்மை உம்முடையநயன் மகாமன் மஹ்மூதில் எழுப்ப போதுமென்று திருவுளமானுன் (ஹதீது )றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளம் பற்றினுர்கள் தஹஜ்ஜது தொழுகையை பத்திபிடியுங்கள் இரண்டு ரகஅத்தானுலும்சரி என்றுர்கள். இன்னும் இரவின் நடுவில் ஒருஅடியான் தொழும் இரண்டு றகஅத்தாகிறது அவனுக்கு துனியாவைக்காணவும் அதிலுண்டான நிஃமத்துகளை காணவும் மெத்த கைருயிருக்கும் என்று திருவுளம் பற்றினுர்கள். இன்னும் றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளம்பற்றினுர்கள். அல்லாஹுத் தஆலா ஒரு மனிதனுக்கு றஹ்மத்து செய்வானுகவும். எந்தமனிதனுனல் அவன் இரவில் எழுந்திருந்து தானும் தொழுது தன் பெண்ஜாதியையும் எழுப்பி தொழசொல்லி அவள் எழும்பாவிட்டால் அவளுடைய முகத்தில் தண்ணீறை தெளித்தானே அந்த மனிதனுக்கு றஹ்மத்து செய்வானுகவும். இன்னும் ஒரு பெண்பிள்ளைக்கு றஹ்மத்து செய்வானுகவும் எந்த பெண்பிள்ளையானுல் தானும் இரவில் எழும்பி தொழுது தன் புருஷனையும் தொழசொல்லி அவன் எழும்பாவிட்டால் அவனுடைய முகத்தில் தண்ணீரை தெளிப்பாளே அந்த பெண்பிள்ளைக்கு றஹமத் செய்வானுகவும் என்று திருவுளமானுர்கள். ஆகையால் தஹஜ்ஜது தொழுகையாகிறது சுன்னத்தாயிருக்கும், அத்தொழுகை குறைந்தது இரண்டு ரக்அத் நடுதரம் நாலுரகஅத் மிகுந்தது எட்டு ரகஅத்தாயிருக்கும் அது இரவில்விடிய ஏழரைநாழிகை இருக்கும்போது அல்லது ஆறுநாழிகை இருக்கும்போது தொழுகிறது எத்தமாயிருக்கும் அதை வளமையான பின் உதுரன்றி விடுகிறது மக்ரூஹு. இனி தஹஜ்ஜுதாகிறது நித்திரைக்கு பின்னுலேயா இருக்கவேண்டும். ஒருவன் உறங்காமல் தொழுதால் தஹஜ்ஜுதென்று சொல்லப்படாதுசலாதுல்லைல் என்று சொல்லப்படும் ஆனுல் அதன்பலநுண்டும்.

## சபருடைய நபில் தொழுகை.

சபர் புறப்படும்போது வீட்டில் இரண்டுறகஅத் தொழுகிறதும், சபரைவிட்டும் வந்துசேரும்போது இரண்டுறகஅத் பள்ளியில் தொழுகிறதும், முஸ்தஹப்பாயிருக்கும்.

## தாய் தகப்பன்மீது நபில்தொழுகிற விபரம்.

அதாவது வெள்ளிக்கிழமை இரவில் மக்ரிபுக்கும் இஷாவுக்குமிடையில் இரண்டு றகஅத்தொழவும். ஒவ்வொரு றகஅத்தில் பாத்திஹா ஒருவிடுத்தம். ஆயதுல்குர்சி பதினைந்து விடுத்தம், குல்ஹுவல்லாஹு அஹது பதினைந்து விடுத்தம் சலவாத்து இருபதுவிடுத்தம் ஓதி தொழுது அதன் தவாபை தாய்தகப்பனுக்காக பக்ஷிஷ் செய்கிறது முஸ்தஹப்பு. அப்படி செய்வது தாய்தகப்பனுக்கு செய்யவேண்டிய கடமையை நிறைவேற்றுகிறதா இருக்கும்.

## கிராணம் திடுக்கம் போலொத்தவேளையில் தொழுகிறது.

சந்திரன் கிராணம் பிடித்திருக்கும்போது, அடமழை மிகுந்து இடிகள் கடினகாற்று இருள் பூமிதொழும்புதல் பேதி போலொத்த வியாதிகள் பகைவரில்நின்றும் உண்டான திடுக்கம் இவைபோலொத்தது உண்டானபோது அவரவரே தனித்தனியே ரவ்வண்டு றகஅத் தொழுகிறது முஸ்தஹப்பு.(ஹதீது) நபிசல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளம் பற்றினர்கள் மனிதர்களே! இந்த திடுக்கங்களில் நின்றும் ஒன்றை நீங்கள் கண்டீர்களாகில் தொழுகையளவில் ஒதுங்கி கொள்ளுங்களென்றுதிருவுளமானர்கள். இனிசூரியகிரஹணவேளையில் ஜும்ஆ உடைய இமாம் குதுபாவைதவிர மற்ற ஷர்துகளைகொண்டு இரண்டு றகஅத்து ஜமாஅத்தாக தொழுகிறதும், தொழுது முடிந்த பின் சூரியன் வெளியாகிறவரை துஆகேட்டு ஜனங்கள் ஆமீன்சொல்கிறதும் சுன்னத்து. ஜும்ஆஉடைய இமாம் ஹாஜிருகாவிட்டால் தனியேதொழுகிறது எற்றம்.

## களாதொழுகையின் விபறம்.

தப்பிவிட்ட தொழுகைக்கும் வக்துடைய தொழுகைக்கு மிடையிலும், இன்னும் தப்பிவிட்ட தொழுகைஒன்றுக்கொன்றுக் கிடையிலும் தர்தீபு வாஜிபா இருக்கும். அதின்விபரமாவது ஒருவனுக்கு ஐந்து வக்துதொழுகை வரையிலும் களாவாக இருந்து வக்துதொழுகை வந்துவிடுமானல் அந்த களாவை தொழுததின் பின்னல்தான் வக்தின் தொழுகையை தொழவேண்டும். அது விதுறு இருந்தாலும் மொக்கும். அதையும் பஜ்ருக்குமுன் களாசெய்யவேண்டும் சாஹிபுத்தர்தீபென்னும் தர்தீபு வாஜிபாயுள்ளவன் தப்பிவிட்டதை களாசெய்யாமல் வக்தியாவை அதைவிட முப்படுத்தினல் கூடாது. இன்னும் ஒருவனுக்கு சில தொழுகைகள் களாவாயிருந்தால் அதுகளை களாசெய்யும்போது

பஜ்ரு, ழுஹரு, அஸரு, மக்ரிபு, இஷா இவ்விதமாக ஒழுங்குடன் தொழவேணும். ஆனல் தப்பிவிட்ட தொழுகைகள், வித்றை தவிர தான். புலூகானது முதல் ஐந்து வக்துக்கு அதிகமா இருந்தாலும் அல்லது களாவைமறந்து வக்தியாவான தொழுகையை தொழுதுவிட்டாலும் அல்லது வக்தியாவான தொழுகையின்வக்து கிட்டுமையாகி விட்டாலும் தர்தீபு விழுந்துபோம், தவரிபோன தொழுகை ஐந்துக்கு அதிகப்பட்ட சபபால் தர்தீபுவிழுந்துப் போனபின் அதுகளைசெய்து வந்ததில் ஐந்துக்கு குறைவாகி விட்டாலும் தர்தீபு மீழாது.

## முஸாபிர் தொழுகையின் விபரம்.

ஒருதனிதன் முகீமான ஊரைவிட்டும் நடுத்தாமாக ராஹத்துடன் நடந்து மூன்றுநாளையில்போய் சேரும்படியான ஊரைநாடி பயணம்புறப்பட்டு வீடுகளை கடந்தால் அவனை முசாபிர்என்று சொல்லப்படும். அவன்அந்த ஊரின் வீடுகளின் எல்கையை விட்டும் கடந்தது முதல் நவ்வாலு றகஅத் பறுளான தொழுகைகளை இரண்டு ரகஅத்தாக தொழுகிறது வாஜிபு. ஒருஊரில்போய் சேர்ந்து அவ்வூரில் பதினைந்துநாள் அல்லது அதிகமாக இருக்கவேணுமென்று நிய்யத்துசெய்தால் அதுமுதல் அவன் முகீமாகி விட்டபடியால், நாலு றகஅத்தும் சரியாய் தொழவேணும். மூன்று, இரண்டு றகஅத்துள்ள தொழுகைகளிலும் பறுலைதவிர உள்ள தொழுகைகளிலும் கஸ்ருஇல்லை.



# பாபுன் பீ பலாயிலுல் ஜும்ஆ.

## ஜும்ஆவுடைய வரிசையில் பேசும் பாடம்.

அல்லாஹுத் தஆலா குருஆன் ஷரீபில் திருவுளமாயிருக்கிறுன் ஓ ஈமான் கொண்டவர்களே! ஜும்ஆஉடைய நாளில் நின்றும் தொழுகையளவில் கூப்பிடப்பட்டால் நீங்கள் அல்லாவுடைய திக்ரளவில் போங்கள். கருத்தாவது தொழுகையளவில் போங்கள். கொள்வினை, கொடுப்பினையைவிட்டுவிடுங்கள், நீங்கள் அரிவுடையவர்களா பிருந்தால் அதை விட்டுவிட்டு தொழுகையளவில் போகிறது, உங்களுக்கு கைரு இருக்கும் என்று அல்லாஹுத்தஆலா குருஆனில் திருவுளமானுன். ஹதீது றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானுர்கள். யாருகிலுமொருவன் ஜனபத் குளிபோல் ஜும்ஆஉடைய நாளில் குளித்துவிட்டு பின்பு அவன்முந்தின சாஅத்தில் ஜும்ஆவுக்கு போனல் ஒரு

ஒட்டகம் குருபான்கொடுத்த சவாபும், இனி இரண்டாம் சாஅத்தில் போனல் ஒருமாடு குருபான்கொடுத்த சவாபும், இனி மூன்ரும் சாஅத்தில்போனல் கொம்புள்ள ஒருதும்பை ஆடுகுருபான் கொடுத்த சவாபும், நாலாம் சாஅத்தில்போனல் ஒருகோழி அல்லது ஒருசாவல் குருபான்கொடுத்த சவாபும், ஐந்தாம் சாஅத்தில் போனல் ஒருமுட்டை குருபான்கொடுத்த சவாபும் எழுதப்படும். இனி இமாம் வந்துவிட்டால் மலக்குகள் கடிதங்களை சுருட்டிவிடுவார்கள். சவாபு எழுதமாட்டார்கள். குத்பாவைகேட்டுக் கொண்டிருப்பார்களென்று திருவுளமானர்கள். இன்னும் நபிசல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவுளமானர்கள். ஜும்ஆவுடைய நாளாகிறது இரண்டு பெருநாளைக்காணவும் மற்ற நாட்கள் அடங்கலைக் காணவும் யேற்றமாயிருக்கும். அடிமை பெண்பிள்ளை சிறுகுழந்தை பிணியாளன் இந்நான்கு பேரைத்தவிர அந்தநாள் தொழுகை ஒவ்வொரு முஸ்லீமான மனிதன்பேரிலும் கடமையாயிருக்கும். யாராகிலும் ஒருமனிதன் தங்கடமன்றி அதை விடுவானுகில், அவன் கருமத்தில் பறக்கத்தில்லை. அவனுக்கு ஹஜ்ஜுடைய பலனும் இல்லை. சதகாவுடைய நன்மையுமில்லை, தொழுகையுடைய வருசையுமில்லை. இன்னமும் அல்லாஹுத் தஆலா என் ஷபாஅத்தை அவனுக்கு கொடுக்கமாட்டான். அவன் இபாதத்தை அல்லாஹுத் தஆலா ஒப்புக்கொள்ளமாட்டான் என்றும், இன்னும் ஜும்ஆவாகிறது பக்கீர்களுக்கு ஹஜ்ஜாகவும் மிஸ்கீன்களுக்கு பெருநாளாகவும் இருக்குமென்று திருவுளமானர்கள். இனி முஅத்தின் பாங்குசொன்னவுடன் வியாபாரம்கொடுக்கல் வாங்கல் முதலான செய்கை அடங்கலையும்விட்டு ஜும்ஆவுக்கு வரவேண்டியது வாஜிபாயிருக்கும். ஆனல் அதபும் ஒடுங்குதலுமாய் சங்கையுடன் காலால் நடந்துவருகிறது யேற்றமாயிருக்கும். வாங்குசொன்னபின் துனியாவுடைய அமல் செய்கிறது தொழுது தீருகிறவரை ஹராமாயிருக்கும்.

## ஜும்ஆவுடைய அதபுகள்.

ஜும்ஆவுக்காக குளித்து மணம் பூசுவதும், நல்ல அழகாகிய ஹலாலான பிடவைகள் உடுத்துகிறதும், நகங்களை அருக்கிறதும், தலைமுடி இரக்கிறதும், பள்ளிக்குள் ஊதுவத்தி முதலாகிய வாசங்களை புகைக்கிறதும், ஜும்ஆவுக்காக காலைநேரத்தில் போகிறதும், கதீப் வருகிறவரைக்கும் இபாதத் செய்துக்கொண் டிருக்கிறதும் சுன்னத்தாயிருக்கும்.

# பாபுன் பீ அஹ்காமுல் ஜும்ஆ.

## ஜும்ஆவுடைய ஹுகும்களை பேசும் பாடம்.

ஜும்ஆவில் பறுலு இரண்டு ரகஅத்து. சுன்னத்து முன்னே நாலுரக்கத்து பின்னே நாலுரக்கத்தாயிருக்கும். அத்தொழுகை விதியாகிறதற்கு அக்லும் புலூகும்தவிர ஒன்பது காரியத்தை ஷர்தாக் கப்படும்.

### ஜும்ஆ விதியாகிறதர்கு ஷர்த்து ஒன்பது.

ஒன்றுவது ஆண்பிள்ளையாயிருக்கிறது, இரண்டாவது நாட்டாமகனுயிருக்கிறது, மூன்றுவது பட்டணத்தில் முகீமாயிருக்கிறது, நாலாவது சுவாத்தியமா இருக்கிறது, ஐந்தாவது கண் குருடின்றி பார்வையுடையவனுயிருக்கிறது, ஆறுவது நடந்துபோக திராணியுண்டா யிருக்கிறது, ஏழாவது அநீதக்காரனைவிட்டும் அச்சம் தீர்ந்திருக்கிறது, எட்டாவது கடுசாகிய மழை சேரில்லாதிருக்கிறது, ஒன்பதாவது சிறைசாலையிலில்லா திருக்கிறது.

### ஜும்ஆ துருஸ்தாகிறதற்கு ஷர்த் ஏழு.

ஒன்றுவது பட்டணம் அல்லது அந்த பட்டணத்துடைய வெளியலாயிருக்கிறது, இரண்டாவது சுல்தான் அல்லது சுல்தானுடைய ஆள் அதிகாரியுண்டா யிருக்கிறது, மூன்றுவது லுஹருடைய வக்தாயிருக்கிறது, நாலாவது அந்த வக்துக்குள்ளே குத்பாஒதி தீருகிறது, ஐந்தாவது குதுபாவை ஜும்ஆகூடுகிற ஜமாஅத்துடைய முகதாவில் தொழுகைக்கு முன்னுலே ஒதிமுடிக்கிறது. ஆறுவது ஜமாஅத்துண்டாயிருக்கிறது. ஏழாவது அதைதொழுகிற பள்ளியில் எல்லோரும் தொழும்படி உத்திரவு கொடுக்கப்படுகிறது.

### இரண்டு பெருநாள் தொழுகையும் சிஹ்றஹத்தாகிறதர்கு ஷர்த்.

இரண்டு பெருநாள் தொழுகையும் ஜும்ஆ விதியானவர்கள் பேரில் ஜும்ஆ வுடைய ஷர்த்துகளில் குதுபாவைத் தவிர மற்றும் ஷர்த்துகளைக் கொண்டு வாஜிபாகும். இதில் குதுபா சுன்னத்தாயிருக்கும். இந்த குதுபாவில் தக்பீரைக்கொண்டு துவர்க்கம் செய்யவும். அது எப்படியெனில், முந்தின குதுபாவை துடர்ச்சியாக ஒன்

பது தக்பீரைக்கொண்டும் இரண்டாவதை ஏழு தக்பீறைக் கொண்டும் துவர்க்கம் செய்து இடைகளிலும் தக்பீர் சொல்லவும்.

## நோன்பு பெருநாள் தொழுகையின் முஸ்தஹப்புகள்.

நோன்பு பெருநாள் தொழுகைக்கு போகுமுன் மதுரமாகிய கனிகளை ஒத்தைப்பட தின்னுவதும், மிஸ்வாக் செய்வதும், குளிக்கிறதும், மணம் பூசுவதும், மிக்க அழகான உடை அணிவதும், பித்ராவாஜிபான தொழுகைக்கு புறப்படுமுன் பித்ரா கொடுக்கிறதும், ஈதுகாவென்னும் குதுபா பள்ளிக்கு காலைநேரம் கால் நடையாக போகிறதும் முஸ்தஹப்பு.

## இரண்டுபெருநாள் தொழுகையின் வக்தும் ஒழுங்குகளும்.

பெருநாள் தொழுகையின் வக்தாகிறது பொழுது ஒரு வல்லய பிரமாணம் உயர்ந்தது முதல் மதியமாகிரவரையிலா இருக்கும். தொழுகையிலிருக்கும்போது மதியமாகிவிடில் தொழுகை பசாதாகிவிடும். பெருநாள் தொழுகையின் ஒழுங்காவது, இமாமும் கவுமுகளும் பெருநாள் தொழுகையை நிய்யத் செய்து தக்பீர் தஹ்ரீமா சொல்லி ஸனு ஓதியபின் மூன்று தக்பீரு சொல்வதில் ஒவ்வொரு தக்பீருக்கும் கையை உயர்த்தி, உயர்த்தின கையை மடக்காமல் தாழவிட்டு மூன்றும் தக்பீருக்கு பின் கையை கட்டவும். அம்மூன்று தக்பீருக் கிடையிலும் மும்மூன்று தஸ்பீஹுடைய கதருக்கு தாமதித்தவர்களாக நின்று பின்பு அஊது, பிஸ்மியும் சொல்லி பாதிஹாவும், இன்னும் ஏதாவது ஒரு சூறத்தும், ஓதியபின் எல்லோரும் முன்போல் கையை உயர்த்தி மூன்று தக்பீர்சொல்லி பின்புகையை உயர்த்தாமல் ருகூவுடைய தக்பீரு சொல்லி ருகூஉசெய்து தொழுகை முடிந்தபின் இமாம் மின்பரில் ஏறி இரண்டு குதுபாஓதுவார். இனி அரபாஎன்னும் ஒன்பதாம்நாள் பஜ்ரிலிருந்து பதிமூன்றும்நாள் அஸ்ரு வரையிலும் கூடிய இருபத்திமூன்று வக்திலும் அந்தந்த நேரத்தின் பறுனு தொழுகை தொழுத உடனே ஆண்பிள்ளைகள் இறைந்தும் பெண்பிள்ளைகள் மெள்ளவும தக்பீர் தஷ்ரீகு ஒருவிடுத்தம் சொல்கிறது வாஜிபு. ஒரு விடுத்தத்தைகாண அதிகமாக்கிறது முஸ்தஹப்பு.

## பித்ராவின் பயான்.

யாதொரு முஸ்லிமாகிய நாட்டா மகனுகிய மனிதன் தன்னுடைய அகத்தியமான ஹாஜத்துகளை விட்டும் மேல் மிச்சமாகிய சகாத்தின்

தொகையுடையவனுயிருந்தால் தன்னே தொட்டும் தன் சிறு பிள்ளே களே தொட்டும் வேலேக்குள்ள அடிமைகளே தொட்டும் பித்ரா கொடுப் பது அவன்பேரில் வாஜிபாகும். வருஷம் நிறப்பமாகவில்லேயானுலு மொக்கும். பெண்ஜாதி பெரிய பிள்ளேகள் கச்சவடத்துக்குள்ள அடி மைகள் இவர்களே தொட்டும் கொடுப்பது வாஜிபாகாது. இனி சிறு பிள்ளேகளுக்கு சொத்திருந்தால் அதுகளுக்காக பித்ராவை அச்சொத் தில் நின்றும் கொடுப்படும். பித்ராவாகிறது மணி கோதும்பில் அரை மரக்காலும் பேரீத்தம்பழம் கொடி முந்திரிபழம் தொலி கோதும்பு இவைகளில் ஒரு மறக்காலுமாயிருக்கும். ஆனல் இவைகளின் விலேயை கொடுப்பது இவ்வஸ்துகளே கொடுப்பதை காண மெத்த வரு சையாயிருக்கும். மரக்காலாகிறது இந்நேரத்தில் இந்நாட்டுகளில் வழங்குகிறபட்டணம் பக்கா படியால்இரண்டேகால்படி கொண்டதாம். இனி அது வாஜிபாகிற நேரமாகிறது நோன்பு பெருநாள் கிழக்கு வெளுக்கிறது கொண்டாயிருக்கும்.



# பாபுல் மையத்து.

## மையத்துடைய பாடம்.

மையத்தை குளிப்பாட்டுகிறதும், நல்லடக்கம் செய்ய எத்தனிக் கிறதும், கபன்செய்கிறதும், தொழுவிக்கிறதும், அடக்கஞ்செய்கிற தும், பறுலுகிபாயாவா இருக்கும்,

## மையத்துத் தொழுகைக்கு ஷர்த்து எட்டு.

ஒன்றுவது மையத்து இஸ்லாமாயிருக்கிறது, இரண்டாவது அது துப்பரவாயிருக்கிறது, மூன்றுவதுமையத்து ஹாஸிருயிருக்கிறது, நாலாவது ஜனங்களுக்குமுன்னலே முற்படுத்திவைக்கிறது, ஐந்தா வது சந்தூகுடன் பூமியின்பேரில்வைக்கிறது, ஆருவது இமாம் பாலிகா யிருக்கிறது: எழாவது மையத்துக்குஒருஉருப்புக்கு நேருகநிற்கிறது,, எட்டாவது இமாமும் ஜனங்களும் மையித்து வெட்கத்தலத்தை மறைக்கிறது, இனிமையித்து தொழுகையின்ருகுன்களாவது:—நாலு விடுத்தம் தக்பீர்சொல்கிறதும் நிலேயில் நிற்கிறதுமாயிருக்கும்.

## மையத்து தொழுகையின் சுன்னத்து நாலு:

ஒன்றுவது மையித்து ஆணு இருந்தாலும், பெண்ணுயிருந்தா லும் இமாம் மையித்துனடைய நெஞ்சுக்கு நேரேநிற்கிறது, இரண்டா

வது முன்தின தக்பீருக்குபின்னாலே ஸனா ஓதுகிறது, மூன்றாவது இரண்டாவது தக்பீருக்குப்பின்னாலே சலவாத்து ஓதுகிறது, நாலாவது மூன்றும் தக்பீருக்கு பின்னாலே துஆஓதுகிறது.



## பாபுன் பீ பயானிஸ்ஸகாத்து.

### ஸகாத்துடைய பயானைபேசும் பாடம்.

அல்லாஹுத்தஆலா குருஆன்ஷரீபில் யாஅய்யுஹல்லதீன ஆமனூஅன்பிகூ என்னும் ஆயத்தில்திருவுளமாகிறான். எஃனீஈமான்கொண்டஜனங்களே! கொள்வினை கொடிப்பினை தோழமை ஒன்றுக்கொன்று சிபாரிசு இவைகள் செல்லாத நாள்வருகிறதர்க்குமுன்பாக உங்களுக்கு நான்தந்திருக்கிற முதலில் நின்றும் ஸகாத்கொடுங்களென்று, அல்லாஹுத்தஆலா திருவுளமானான், இன்னும் வல்லதீன யக்னிசூனஸ்ஸஹப வல்பில்லத என்னும் ஆயத்தில் திருவுளமாயிருக்கிறான்.

(எஃனீ) தங்கம் பொன் சகாத்கொடாமல் வைத்திருக்கிறார்களே அவர்களாகிறவர்கள் அந்த தங்கம் வெள்ளியை நரகத்துநெருப்பில் காயவைத்து இதுதான் நீங்கள் உங்களுக்கு புதயலாக்கிவைத்திருந்தீர்களே அதை ருசிபாருங்கள்என்று அவர்களுடைய முகங்களிலும்விலாக்களிலும் முதுகுகளிலும் அதைகொண்டு சூடுபோடப்படுமே அந்த நாளையிலுண்டான அதாபைகொண்டு அவர்களுக்கு சோபனம் சொல்லுமென்று திருவுளமானான். (ஹதீது) ரசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானார்கள். ஸ்காத்தை விலக்கினவன் நரகம்புகுதுவான். ஸகாத்கொடாதவனுக்கு தீனுமில்லை நோன்புமில்லை ஹஜ்ஜுமில்லை பீசபீலுமில்லை என்று திருவுளமானார்கள். இன்னும் றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானார்கள். உங்களுடைய முதல்களைஸகாத்கொடுக்கிறதுகொண்டுகார்மானமாக்கிக்கொள்ளுங்கள் நசலாளிகளுக்கு ஸதகாவைகொண்டு மருந்துசெய்யுங்கள். பலாய் முசிபத்துகளுக்கு தாழ்மையுடன் துஆ கேள்கிறதுகொண்டு முன்நோக்குங்களென்று திருவுளமானார்கள்.

### ஸகாத்து பறுளாகிறதர்க்கு ஷர்த்து ஐந்து.

ஒன்றாவது பைத்தியமன்றி புத்திசாலியாயிருக்கிறது, இரண்டாவது பாலிகாயிருக்கிறது, மூன்றாவது முஸ்லிமாயிருக்கிறது, நாலாவது நாட்டாமகனாயிருக்கிறது, ஐந்தாவது கடனைவிட்டும் விடு சேலை முத

லான அகத்தியமான சாமான்களைவிட்டும் மேல்மிச்சமான நிஸாபென்னும் தொகை உள்ளவனாயிருக்கிறது.

### ஸகாத் சிஹ்ஹத்தாகிறதர்க்கு ஷர்த்து.

ஸகாத்தை பறுலாக்கிறதின் ஷர்த்தாவது, தொகைவந்து சேர்ந்ததிலிருந்து ஒருவருடம் நிறம்புகிறதாயிருக்கும். ஒருவருவடத்திநிடையில் கச்சவடம் அநந்தரம் முதலியவைகளால் பிரயோஜனம் தேடப்பட்டதை அஸல் நிஸாபுடன்சேர்ந்து எல்லாத்திர்க்கும் சகாத்கொடுக்கவேணும். இனி சகாத் நிறைவேறுகிறது துரிஸ்தாகிறதின் ஷர்தாவது அதை கொடுக்கும்போது என்பேரில் விதியான ஸகாத்தை கொடுக்கிறேன் என்று அல்லது அம்முதலே கணக்குபார்த்து வைக்கும்போது ஸகாத்கொடுக்கிறதர்காக எடுத்துவைக்கிறேன் என்று நிய்யத் செய்ய வேண்டும்.

### பொன்வெள்ளி கச்சவடசரக்கின் நிசாபு.

அதாவது:—பொன்னானாலும் இருபது கழஞ்சியும், வெள்ளியானால் இருநூரு திர்ஹமுமாம், கச்சவடசரக்கு இருந்தால் தங்கவிலையாவதுவெள்ளிவிலையாவதுவைத்துகணக்குபிட்டுசவுபடி கிரயத்தில்ஸகாத் கொடுக்கப்படும். அதாவது நாற்பதிலொன்று கொடுக்கிறது பறுலு. சொன்ன தொகைக்கு குறைந்தால் ஸகாத்துவிதிஇல்லை. மேல்சொன்ன துகைக்கி எவ்வளவு கூடினதோ, அவ்வளவிலும் பத்துக்கு கால்வீதம் சேர்த்து கொடுக்கவேண்டும்.

### ஆடுமாடுகளின் நிஸாபு.

ஆடுமாடு வகைறுக்களின் ஸகாத்தாவது, ஒருவருடத்தில் மிகுந்த நாளைக்கி கைதீவனமில்லாது காட்டில் மேய்ந்து ஜீவிக்கும்படியான ஆடுகளிலும், மாடுகளிலும், ஒட்டகங்களிலும் ஸகாத்கொடுக்கிறது பறுளாஇருக்கும். கைதீவனம் தின்னப்பட்டதுகளிலும் வேலைக்கி வைத்திருக்கப் பட்டதுகளிலும், ஐந்துக்குகுறைந்த ஒட்டகங்களிலும், முப்பதுக்கு குறைந்த மாடுகளிலும், நாற்பதுக்கு குறைந்த ஆடுகளிலும், சகாத்பறுலு இல்லை. இனி ஆடு நாற்பதிலிருந்து நூத்திஇருபது வரைஒருஆடும், நூத்திஇருபதிலிருந்து இருநூருவரை இரண்டுஆடும், இருநூத்திலிருந்து முன்னூத்தி தொண்ணூத்தொன்பது வரை மூன்றுஆடும் கொடுக்கப்படும். நானூறுக்கு நாலுஆடும் கொடுக்கப்படும். அப்பாலே எவ்வளவு அதிக்கப்பட்டாலும், நூத்துக்கு ஒன்று வீதம் கொடுக்கப்படும். இனி மாடுகளில் எருமை பசுவு காளை எதுவா

ஜூம் முப்பதிருந்தால் ஒருவருஷத்துகன்று ஒன்றும், நாற்பதுக்கு இரண்டு வருஷத்து கன்று ஒன்றும், அதற்குமேல் அன்பத்தொன்பது மட்டிலும் நாற்பதுக்கு கொடுப்பதைதவிர மேற்பட்டவைபின் ஒவ்வொன்றுக்கு இரண்டுவயது கன்றுடைய கிரயத்தில் நாற்பதில் ஒவ்வொருபங்கு அதிகப்படுத்தியும், அறுபதுக்கு ஒருவயது பருவத்துடைய இரண்டு கன்றும், எழுபதுக்கு ஒருவயது பருவத்துடையகன்று ஒன்றும், இரண்டுவயது பருவத்தையுடைய கன்றுஒன்றும், எண்பதுக்கு இரண்டுவயது பருவத்துடைய கன்று இரண்டுமாக இதே பிரகாரம் ஒவ்வொரு நாற்பதுக்கு இரண்டுவருஷக்கன்றுஒன்றும், ஒவ்வொரு முப்பதுக்கு ஒருவயதுகன்று ஒன்றுவிதம் கணக்குபார்த்து சகாத் கொடுக்கவேணும்.

## நஞ்சை புஞ்சைகளின் நிஸாபு.

நஞ்சை புஞ்சை முதலான நிலங்களில் வறப்பட்ட வரும்படியில், தண்ணீர் இறவையாய் உற்பத்தியாகிறதில் வருகிற வரும்படியில் இருபதிலொன்றும், மழை பெய்து அல்லது குளத்து தண்ணீர் பாய்ந்தும் உற்பத்தியாகிற வரும்படியில் பத்தில் ஒன்றும் கொடுக்கப்படும். இன்னும் உஷ்ரு குராஜு பூமிக்கு ஹுகும் விரிவாய் இருக்கிறது. அதை பெரிய கிதாபுகளில் அறியலாம்.

## ஸகாத்துவாங்க பாத்தியமானவர்கள் ஏழுபேர்.

ஒன்றுவது பகீறுனவன் நிசாபுக்கு குறைந்த ஐவேஜுடையவன், இரண்டாவது மிஸ்கீன் அவன் யாதொன்று மில்லாதவன், மூன்றுவது ஸகாத் முதலைபிரித்து சுல்தானிடம் கொடுக்கும் தெண்டகாரன், நாலாவது முகாதபெனும் முரிஎழுதிகொடுத்த அடிமை, ஐந்தாவது கடன் பட்டிருக்கிற மிடுமையாளன் ஆறுவது பீசபீலுக்கு போகிறவன் எழாவது முசாபிறுனவன்.

## ஸகாத்துவாங்க தகாதவர்கள்.

காபிர்களுக்கும் தன் தாய்தகப்பன் பாட்டன் பாட்டி தன்னுடைய அடிமைபிள்ளை பிள்ளையுடைய பிள்ளை பெண்ஜாதி தான்முறிஎழுதிவாங்கிஇருக்கிற அடிமைபுருஷன் இருநூறு திர்ஹம் நிசாபுடைய சீமான், அவனுடைய சிறு குழந்தை பனூஹாஷிம்கள் அவர்கள் உரிமை விட்ட பயல்கள் ஆக இவ்வளவுபேருக்கும் ஸகாத் கொடுத்தால் கூடாது.

# பாபுன்—பிஃஸ்செளம்.

## நோன்புடைய வருசையில் பேசும் பாடம்.

ஓய் ஈமான்கொண்டவர்களே! உங்கள்பேரில் நோன்பை பறுலாக்கப்பட்டது. ஆதம்முதல் உங்களுக்கு முன்உண்டான நபிமார்கள் பேரிலும் உம்மத்துமார்கள் பேரிலும் பறுலாக்கப்பட்டதுபோல் என்று அல்லாஹுத்தஆலா திருவுளமானுன். றசூல்ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானுர்கள். ஐந்துவக்து தொழுகையும் ஒருஜும்ஆ மறுஜும்ஆவரையிலும், ஒருறமளான் மறுறமளான் வரையிலும் அதுகளுக்கு இடைகளில் உண்டானபாவங்களுக்கு தெண்டகுத்தமா யிருக்கும். பெரும் பாவங்களைதவிழும் காலமெல்லாம் றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானுர்கள். யாருகிலும் ஒருவன் றமளானில் ஒருநாள் நோன்புபிடித்தால் அவன் பாவத்தைவிட்டும் அன்றுபிறந்த பாலகனைபோலாகிவிடுவான். அவன் ஹயாத்தாஇருக்க அவனைவிட்டும் மாதம் புறப்பட்டால் மருவருஷமட்டில் அவன்பேரில் ஒருபாவமும் எழுதப்படாதென்று திருவுளமானுர்கள். இன்னும் திருவுளமானுர்கள். நோன்பாளியுடைய நித்திரை வணக்கம் அவனுடைய மூச்சு தஸ்பீஹு அவனுடைய துஆகபூல், அவனுடைய பாவம் பொருக்கப்பட்டது. அவனுடைய அமலுக்குதவாபு இரட்டிப் பாக்கப்பட்டதுஎன்று திருவுளமானுர்கள். றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானுர்கள். நோன்பாளியுடைய வாயின் வாடையாகிறது அல்லாஹுத் தஆலா இடத்தில் கஸ்தூரிவாடையினும் மெத்தமணமா இருக்கும். கருத்தாவது கியாமத்தில் அவர்களுடைய வாய்களின்வாடை கஸ்தூரிவாடைபோல் வீசுமென்றது. இன்னும் திருவுளமானுர்கள். நோன்பாளிகள் கபுருகளைவிட்டும் புறப்படும்போது அவர்களுடைய வாய்களில் நின்றும் கஸ்தூரியைக்காண மணமான வாடைவீசும், அதைகொண்டு அவர்களை கண்டுபிடித்து அவர்களுக்கு தீன்மாவைகளையும் கஸ்தூரி முத்திரைவைத்த கெண்டிகளையும் கொடுத்து, மனிதர்வயிறு நிரம்பியநேரத்தில் நீங்கள் பசித்திருந்தீர்கள், இப்போ புசித்திருங்கள். அவர்கள் தாகம் தீர்ந்திருந்த நேரத்தில் நீங்கள் தாகித்திருந்தீர்கள். இப்போ இதை குடித்து தாகம் தீருங்கள் அவர்கள் சுகமாயிருந்த நேரத்தில் நீங்கள் வருத்தத்தி லிருந்தீர்கள். இப்பநீங்கள் சுகத்திலிருங்கள் என்று சொல்லப்படும் அவர்கள் தின்பார்கள், குடிப்பார்கள், சுகம்பெருவார்கள், மற்ற மனிதர்கள் கேள்விகணக்கிலும் தாகத்திலும், வருத்தத்திலும்

இருப்பார்கள். றசூல் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானார்கள். யாராகிலும் ஒருவன் றமலான் தீருமளவும் மக்ரிபும் இஷாவும் ஜமாஅத்தில் தொழுதால் லைலதுல் கதரில் நின்றும் நிறப்பமான பெயறை எடுத்துகொண்டா னென்று திருவுளமானார்கள். இன்னும் யாதாமொருவன் இஷாவுடைய ஜமாஅத்துக்கு ஹாளிருனல் அவன் றமளானில் நின்டும் லைலதுல் கத்ரை எத்திகொண்டா னென்று திருவுளமானார்கள்.

## நோன்புடைய ஹுகும்கள்.

நோன்பாகிறது ஹைலு நிபாசு இவைகளை விட்டும் துப்பரவாகிய முஸ்லிமானவர்கள், கிழக்கு வெளுத்ததுமுதல் பொழுது அடைகிற வரையில், யாதொரு வஸ்துவை உள்ளே செலுத்துவதை விட்டும் அபத்தின் ஆசையை நிறைவேற்றுகிறதை விட்டும் நீங்கி நிய்யத்தோடிருக்கிறது. ஆகையால் நோன்பு துரிஸ்தாகிறதற்கு, ஷர்த்து இஸ்லாமா இருக்கிறதும், ஹைலு நிபாசைவிட்டும் துப்பரவாயிருக்கிறதும் நிய்யத்து வைப்பதுமா யிருக்கும்.

## நோன்பின் முஸ்தஹப்புகள் மூன்று.

ஒன்றுவதுசஹ்று வக்தில் சாப்பிடுகிறது, இரண்டாவது கிழக்கு வெளுக்கிற சந்தேகப்படுகிற வரையிலும் அதை பிற்படுத்தாம லிருக்கிறது; மூன்றுவது வக்து வந்தவுடன் நோன்பு திறக்குகிறது.

## நோன்பு மூன்றுவகை.

ஒன்றுவது பறுலானநோன்பு. அதாவது றமலானுடைய அதாவான நோன்பும் களாநோன்பும் தெண்டங்களுடைய நோன்புமாயிருக்கும். இரண்டாவது வாஜிபானநோன்பு அதாவது, நேற்சைநோன்பும் நபில்நோன்பில் துடங்கியபின் அதை நிறப்பமாக்குவதும், அதை பசாதாக்கினல் களாசெய்வதும் நேர்சை செய்யப்பட்ட இஃதிகாபுடைய நோன்பா இருக்கும், மூன்றுவது முஸ்தஹப்பான நோன்பு அதாவது முஹற்றமாதம் ஒன்பது அல்லது பதினோரும்நாளுடனே ஆஷூறு வென்னும் பத்தாம்நாள் நோன்பும் துல்ஹஜ்ஜு ஒன்பதாம் நாளாகிய அறபா நோன்பும் மாசமடங்கலிலும் ஐயாமுல்பீலு என்னும் பதிமூன்று பதிநாலு பதினைந்து இம்மூன்றுநாள் நோன்பும் வியாழன் திங்கள் நோன்பும், ஷவ்வால்மாதம் ஆறுநோன்பும் ஆகிய இவைகளா இருக்கும்.

## தெண்டகுற்ற மில்லாமல் நோன்பை முறிக்கும் கருமங்கள்.

அதாவது வாய் கொப்பளிக்கும்போது, தண்ணீர் உள்ளே போகிறதும், நித்திரை செய்தவனை குடிக்கிறதும், கிழக்கு வெளுக்கவில்லை என்று ஜிமாஉ செய்கிறதும், கிழக்கு வெளுக்கவில்லை என்று சஹறு ஒஜீபனம் தின்னுகிறதும், ஒருவனுடைய வம்புதலுக்காக நோன்பை முறிக்கிறதும், அல்லது மாதியாக தின்றவன், ஜிமாவுசெய்தவன், ஹாக்கத்தானவன், பார்வையால் இந்திரியத்தை இறக்கினவன், சத்தி மிகுதமானவன் நோன்பு முறிந்து விட்டதென்று எண்ணி யாபகத்தோடு தின்றாலும், ஜிமாஉசெய்தாலும், காதுக்குள்ளே எண்ணை சொட்டுவிட்டாலும், கல்லைகட்டையை இரும்பைஇதுபோலுத்தவைகளைமுழுங்கினாலும், றமளான்அடங்களிலும் நோன்பு பிடிக்கிறதைநிய்யத்து செய்யாமல் பிடித்தாலும், நிய்யத்துசெய்யாமல் விடிந்தவன்யாபகத்தோடு தின்றாலும், தொண்டைக்குள் மழை, பனி, நுழைந்தாலும், பெண்ஜாதியை முத்தமிட்டு அல்லது தொட்டு மனிஇறங்கி விட்டாலும், றமலான் அதாவான நோன்பல்லாத்ததை டசாதாக்கிவிட்டாலும் இஸ்திஞ்சா துப்புரவு செய்யும்போது தண்ணீர் பின்துவாரம் அல்லது முன்துவாரத்துக்குள்ளே நுழைந்தாலும், தானே வாய்நிறம்பிய சத்தியை உள்ளே மீளவைத்தாலும் யாபகத்தோடு முறண்டாய் சத்திஎடுக்க தேடி வாயை நிறப்பிவிட்டாலும் பல்லுக்கிடையில் கடலை பிறமாணமிருந்து அதை தின்றாலும் பொழுதடையாமலிருக்க நோன்பு திறந்தாலும் நோன்பு முறிந்துவிடும், தெண்ட குற்றமில்லை. களாசெய்ய வேண்டும்

## தெண்டகுற்றத்தோடு நோன்பை முறிக்கும் கருமங்கள்.

அதாவது றமளான் அதாவான நோன்பில் யாபகத்தோடு இரண்டிலொரு துவாரத்தில் ஜிமாவுசெய்தாலும், அல்லது ஜிமாவு செய்யப்பட்டாலும், யாதொரு வஜீபனத்தை தின்றாலும், யாதொரு மருந்தை குடித்தாலும், வாயில் புகுந்தமழை அல்லது பனி முழுங்கினாலும் பெண்ஜாதியுடைய எச்சயை முளுங்கினாலும் அல்லது இரத்தம் குத்தி வாங்கினதில் அது நோன்பை முரிக்குமென்றெண்ணி யாபகத்தோடு தின்றாலும், நோன்பு முறிந்துவிடும் தண்டகுற்றமும் கொடுத்து களாவும் செய்யவேண்டும்.

## கபாரத்தென்னும் தெண்டமாவது.

கபாரத்தென்னும் தெண்டமாவது யாதொரு ஐபுமில்லாத அடிமையை உரிமைவிடுகிறது. அது ஏலாவிட்டால் இரண்டு பெருநாளும் துல்ஹஜ்ஜு மாதம் பதினொண்ணு பன்னிரண்டு பதிமூன்று இந்தநா எல்லாத்ததில் இரண்டுமாதம் தொடர்பிடியாக நோன்புபிடிக்க வேணும். அதற்கு திராணி பெறுவிட்டால் அருபது மிஸ்கீன்களுக்கு காலையும் மாலையும் வயிறுநிறைய ஒஜீபனம் கொடுக்கவேண்டும். அல்லது அருபது மிஸ்கீனுக்கு ஒவ்வொருவருக்கு மணிகோதம்பானல் அரை மரக்கால் ஈத்தம்பழம் தொலிகோதம்பானல் ஒருமரக்கால் அல்லது அதன்கிறயம் விதம் கொடுக்கவேணும்.

## நோன்பை முரிக்காத கருமங்கள்.

நோன்பை முரிக்காத கருமங்களாவது:—நோன்பு பிடித்தவன் மாதியாக தின்றாலும், குடித்தாலும், ஜிமாஉசெய்தாலும், தொண்டையில் புழுதி, அல்லது ஈ, அல்லது புகைபுகுந்தாலும், எண்ணை தேய்த்தாலும், சுருமா போட்டாலும், இரத்தம்குத்தி வாங்கினாலும், பெண்ஜாதியை முத்தமிட்டு விந்திரங்க வில்லையானாலும், ஹாக்கத்தானாலும், பார்வை இடுகிறதினால் யோசனை இடுகிறதினால் விந்திரங்கினாலும், ஒழுசெய்தபின் வாயிலுள்ள எச்சிலீரத்தை எச்சியுடன் முழுங்கினாலும் காதில் தண்ணீர் புகுந்தாலும், காதில் குச்சியை மடக்கிமடக்கி புகுத வைத்தாலும், பல்லுகளுக்கு இடையிலிருந்து கடலை பிரமாணத்துக்கு தாழ்ந்ததை முழுங்கினாலும், வாய்நிறம்ப சத்தி எடுத்தாலும், ஜுனுபாளியாக விடிவேருனாலும் புரம்பேசினாலும், மூக்கிலே சளிஇருந்து அது யுருஞ்சி தொண்டைகுளியில் புகுந்தாலும், வாய்நீர் நாடியளவில் தொங்கினதை உதட்டினால் உள்ளே இழுத்தாலும், யாதொருவஸ்துவை வாயால் சுவைத்தாலும் நோன்பை முறிக்காது, இவைகளில் சிலது ஹறும், சிலது குற்றமில்லை, சிலது மக்ரூஹாயிருக்கும்.

## நோன்பின் மக்ரூஹுகள்.

நோன்புடைய மக்ரூஹுகளாகிறது நோன்பாளி தங்கடமின்றி யாதொன்றை சுவைத்து ருசிபார்த்து துப்புகிறதுமன்று சேர்ந்த வெள்ளை குந்துருக்கத்தை மெல்லுகிறதும் ஒழுவில் வாய் கொப்பளிக்கும்போது நாசிக்குத் தண்ணீர்செலுத்துகிறபோதும் அதிக கடப்பாக செய்கிறதும், இன்னும் நோன்பை முறிக்கிறதை அச்சந்தீர வில்லையானல் பெண்ஜாதியை முத்தமிடுகிறதும், பிடிக்கிறதும், கழுத்தோடு

கழுத்து கட்டி அணைக்கிறதும், உமிழ்நீரை வாயில் சேகரித்து விழுங்குகிறதும் நோன்பைவிட்டு பலகேடாகும்படியான காரியத்தை செய்கிறதும் மக்ரூஹு.



# பாபுல் ஹஜ்ஜு.

## ஹஜ்ஜுடைய வருசையை பேசும்பாடம்.

அல்லாஹுத் தஆலா திருவுளமானன். எஃதி யாரூவது ஒரு முஸ்லிமான மனிதன்தான் செய்யவேண்டிய கடன்போக தனக்கும் தன் பெண்ஜாதி பிள்ளைகளுக்கும் மக்கம்போய் அவன் வருகிறவரை காணும்படியான சிலவிற்கும் வாகனத்திற்கும், திராணிபெற்றால் அவன் அல்லாவுக்காக கஃபாவில் சென்று ஹஜ்ஜுசெய்கிறது கடமையாயிருக்கும். (ஹதீது) நபிசல்லல்லாஹு அலைஹிவசல்லம் திருவுளமானார்கள். யாருகிலும் ஒருவன் ஹஜ்ஜுக்குபோய் வாதிராணி பெற்று ஹஜ்ஜுசெய்யாமல் மவுத்தானல் அவன் நாடினல் எஹூதியாக சாகவும் நஸ்ரூணியாக சாகவும் எஃதி அவன் சாகும்போது எஹூதியாக சாவான். அல்லது நஸ்ரூனியாக சாவான். என்றும், இன்னும் யாருகிலும் ஒருவன் அல்லாவைநாடி ஹஜ்ஜுசெய்யபோய்வந்தால் அவன் முன்செய்த பாவங்களையும் பின்செய்த பாவங்களையும் பொருக்கப்படும். இன்னுமவன் யாருக்காக துஆகேட்டானே அந்த துஆவையும் கபூல்செய்யப் படுமென்றும் இன்னும் யாருகிலும் ஒருவன் ஹஜ்ஜு செய்கிறவனுக உம்ருசெய்கிறவனுக நாடி வீட்டைவிட்டு புறப்பட்டு போகிறவழியில் மவுத்தாகிவிட்டால் அவனுக்கு ஹஜ்ஜுடைய தவாபையும் உம்ருஉடைய தவாபையும் கியாமநாள் வரையிலும் வருடமடங்கலுக்கும் அல்லாஹுத் தஆலா கொடுப்பானென்றும் இன்னும் யாராகிலும் ஒருவன் ஹஜ்ஜுக்குபோய் வரும்போது வீட்டுக்குள் நுழைகிறதர்க்கு முன்பால் அவனைக்கண்டால் அவனுக்கு சலாம்சொல்லி கைகொடுத்து உனக்கு பிழையைபொருக்க தேடும்படி சொல்லு அவனேபாவங்களை பொருக்கப்பட்டவனு யிருக்கிறான் என்றும் திருவுளமானார்கள்.

## ஹஜ்ஜுடைய ஒழுங்குகள்.

யாருகிலுமொருவன் ஹஜ்ஜுக்குபோக நாட்டங்கொண்டால், முதலாவது தன் பாவத்தை விட்டும் தெளபாசெய்யவும், கடன்முதலா

னதுகள் மனிதர்களுக்கு கொடுக்கவேண்டிய திருந்தால் அவைகளை நிறைவேற்றி ஜனங்களுடைய பாரம் தன்மேல் விழுந்திருப்பதை யகற்றவும் பெண்டீர் மக்களின் வகைருவின் அன்னவஸ்திரம் முதலானதை நடப்பிக்கவும் வசியத்து பத்திரிகை எழுதவும் ஹலாலான சொத்துகளில் நின்றும் வழிசிலவுக்கு எடுத்துகொள்ளவும் சந்தேகமான சொத்துகளில் நின்றும் எடுத்து ஹஜ்ஜூ செய்தால் அந்தஹஜ்ஜூ கபூலாகிறதில் தடைஉண்டா யிருக்கிறதென்றும், வந்திருக்கிறது. சந்தேகமில்லாத பொருளாவது:—ஒருவன் இடத்தில் தனக்கு வழிசிலவுக்கு காணும்படியான ஐவேஜூ கடன்வாங்கி வேறே வைத்துவிட்டு தன்னிடமிருக்கிற சந்தேகமான சொத்தை அக்கடனுக்கு ஈடுசெய்து விடுகிறதாயிருக்குமென்று ரூஹூல் பயானில் வருகிறது. ஆனால் ஹறுமாயிருக்கிற முதலே அப்படி செய்தால் கூடாது.

## ஹஜ்ஜூடைய ஹூகும்கள்.

ஹஜ்ஜூ செய்கிறதாவது:—அதன் நிய்யத்துகொண்டு இஹ்ரும் கட்டி நஹறெனும் பத்தாம்நாள் ப்ஜ்ரிலிருந்து அஸ்ரிநொடுக்கம் வரையில் தவாபு செய்தவனாக கஃபாவை சியாறத்து செய்கிறது. அரபாநாள் மதியம் திரும்பினதிலிருந்து நஹ்ருடையநாள் பஜ்ருவரையிலுமுள்ள நேரங்களில் எந்தநேரமாவது தரிபட்டவனாக அரபாவை சியாரத் செய்கிறதுமா யிருக்கும். ஆனால் இஹ்ரும் கட்டுகிறது ஷர்தாயிருக்கும். இஹ்ரும் கட்டுகிறதாகிறது ஒழுவு செய்தபின் அல்லது குளித்தபின் துப்பரவாகிய தையலில்லாத வெள்ளைசீலை இரண்டிலொன்றை உடுத்து ஒன்றைமேல் போட்டு இஹ்ரும் கட்டுகிறதலத்தில் மணம்பூசி இரண்டு ரக்அத்தொழுது ஆண்டவனே! நான்ஹஜ்ஜை நாடுகிறேன் அதை எனக்கு இலேசாக்கி தரவேணும். அதை கபூல் செய்ய வேண்டுமென்று நாடி மொழிந்து தல்பியாவும் சொல்லி முடிக்கவும், இப்படி இஹ்ரும் கட்டுமுன் முடி இறக்கிறது நகம் தரிக்கிறது போலான சியல்களைசெய்து கொள்கிற முஸ்தஹப்பாம்.

## ஹஜ்ஜூ பறுலாகிறதர்க்கு ஷர்த்து எட்டு.

ஒன்றுவது இஸ்லாமாயிருக்கிறது, இரண்டாவது புத்திசாலியாயிருக்கிறது, மூன்றுவது பாலிகாயிருக்கிறது, நான்காவது தன் ஊர்காரர் புறப்படும் நேரத்தில் திராணிபெறுகிறது, ஐந்தாவது நடுத்தரமாகிய ஊண் தீன் சாமானின்பேரில் திராணிபெற்று யிருக்கிறது, ஆறுவது தாருல்ஹரப் என்னும் இஸ்லாமில்லாத காபிர்தேசத்தி லிருக்கிற

ஒரு முஸ்லிமானவன் ஹஜ்ஜூ விதியென்று அறிகிறது, எழாவது தின்னப்பட்ட தீனின்பேரில் திராணிபெற்று யிருக்கிறது, எட்டாவது தான் போய்வருகிற வரைக்கும் தன்னுடைய சிலவைவிட்டும் தான் அன்னவஸ்திரம் கொடுக்கவேண்டியது வாஜிபு என்று அரிகிறவர்களின் சிலவைவிட்டும் விடு சாமான் தொழிலாயுதம் கடனுயிருக்கிறது.

## ஹஜ்ஜை நிறைவேற்றுகிறதற்கு ஷர்த்துகள் ஐந்து.

ஒன்றுவது சரீரம் சுவாத்தியமாயிருக்கிறது, இரண்டாவது பாதையில் அச்சம் தீர்ந்திருக்கிறது, மூன்றுவது சிறைச்சாலையில் இல்லாமலிருக்கிறது, நான்காவது பெண்பிள்ளைக்கு கொள்ள ஹராமானவன் புருஷனுண்டாயிருக்கிறது. ஐந்தாவது இத்தத்து யில்லாமலிருக்கிறது.

## ஹஜ்ஜூடைய வாஜிபுகள் இருபத்திரண்டு.

ஒன்றுவது மீக்காத்து என்னும் இஹ்றாம் கட்டுகிறதற்கு குறிப்பிட்ட எல்கையில் இஹ்றாம் கட்டுகிறதும், இரண்டாவது அறபாவில் பொழுது அஸ்தமிக்கும் வரையில் தரிபடுகிறது, மூன்றுவது நஹ்றுடையநாள் கிழக்கு வெளுத்தபின் சூரியன் உதயமாகுமுன் முஸ்தலிபாவில் தரிபடுகிறது. நான்காவது ஜும்றாஹ்களை கல்லால் எரிகிறது. ஐந்தாவது ஹஜ்ஜூ உம்றாஹ் இரண்டுக்கும் சேர்த்து இஹ்றாம் கட்டினவனும் உம்றாசெய்தபின் ஹஜ்ஜூக்கு இஹ்றாம் கட்டினவனும் குருபான் கொடுக்கிறது. ஆறுவது தலைமுடி இறக்கிறது. எழாவது தலைமுடியை ஹராமுடைய நாளில் குறிப்பிட்டிருக்கிறது. எட்டாவது தலைமுடி யிரக்குமுன் கல்எரியை முற்படுத்துகிறது. ஒன்பதாவது இவையிரண்டுக்குமிடையில் ஹஜ்ஜூ உம்றாவுக்கு இஹ்றாம் கட்டினவனும் உம்றாசெய்தபின் ஹஜ்ஜூக்கு இஹ்றாம் கட்டினவனுக்கு குருபான் ஆக்கிக் கொள்கிறது. பத்தாவது தவாபு ஸியாரத்தை நஹ்றுடைய நாட்களில் செய்கிறது. பதினேறுவது சபா, மருவாவுக்கிடையில் தொங்கோட்டத்தை ஹஜ்ஜூடைய நாளில் செய்வது. பன்னிரண்டாவது தொங்கோட்டத்தை தவாபுக்கு பின்னாலே செய்கிறது. பதின்மூன்றுவது தங்கடமில்லாதவன் நடந்துபோகிறதும், பதினலாவது தொங்கோட்டத்தை சபா மலையில் நின்றும் துவக்கம் செய்கிறது. பதினைந்தாவது பயணத்துடைய தவாபும் மற்றும் தவாபுகளும் ஹஜ்ஜூருல் அஸ்வதில் நின்றும் துவக்கம்செய்வது. பதினறுவது எந்த தவாபானாலும் எழு எழு விடுத்தம் அடங்கலுக்கும் இரண்டு ரகஅ

த்து தொழுகிறது. பதினேழாவது தவாபில் வலதுபுறம் முன்துடங்குகிறது. பதினெட்டாவது தங்கடமில்லாதவன் நடக்கிறது. பத்தொன்பதாவது சிறுதுடக்கு பெருந்துடக்கைவிட்டும் துப்பரவாயிருக்கிறது. இருபதாவது வெட்க ஸ்தலத்தை மறைக்கிறது. இருபத்தொன்றுவது தவாபு வியாரத்தில் மிகுந்ததை செய்தபின் கொஞ்சத்தை செய்கிறது. இருபத்திரண்டாவது விலக்கானதுகளை விடுகிறது.

## ஹஜ்ஜுடைய சுன்னத்துகள்.

ஹஜ்ஜுடைய சுன்னத்துகளாவது:— இஹ்றாம் கட்டும்போது குளிக்கிறதும் ஒலுசெய்கிறதும், வெண்மையாகிய புதிதாகிய அல்லது வெளுத்து துப்பரவான இரண்டு பிடவையில் ஒருபிடவையை உடுத்தி ஒருபிடவையை முதுகின்பேரில் போடுகிறதும், இஹ்றாம் கட்டுகிறதற்கு முன் மணம் பூசுகிறதும், அப்போது இரண்டுரக்காத்து தொழுகிறதும், இஹ்றாம் கட்டினதுமுதல் எப்போதும் மேட்டில் இருக்கும்போதும் வாகனங்களை சந்திக்கும்போதும் சஹறு வக்திலும் தல்பியா அதிகமாய் சொல்லுகிறதும் தல்பியாவை துடங்கும்போதெல்லாம் அதைமடக்கி மடக்கி சொல்லுகிறதும் சலவாத்து மிகுதம் ஓதுகிறதும் சொர்க்கலோகத்தையும் அதன் தோழமையையும் ஆண்டவனிடம் கேட்கிறதும், நரகத்தைவிட்டும் காவல்தேடுகிறதும், மக்காஷரீபில் புகுதுகிறதற்கு குளிக்கிறதும், மக்காவுக்குள் மேல்புறத்து வாசல் வழியாய் புகுதுகிறதும், சிறப்பாகிய பைத்துல்லாவை தரிசிக்கும்போதெல்லாம் தக்பீரு தஹ்லீல் சலவாத்து சொல்லுகிறதும், அதைக்கண்டபோது தனக்குவேண்டிய ஹாஜத்தைக்கொண்டு துஆகேட்கிறதும், தவாபுல் குதூமை செய்கிறதும் தவாபுசெய்யும்தோரெல்லாம் ஹஜருல் ஹஸுவது முன்னே தக்பீர்சொல்லி அதை முத்தமிடுகிறதும், முத்தமிடகஷ்டமாயிருந்தால் கையைநீட்டி இஷாராசெய்து தக்பீர் தஹ்லீல் சலவாத்து ஓதுகிறதும், பள்ளியுடைய சுவரிலே இருக்கிற மீலேனில்அக்ளரைனுக் கிடையில் ஓடுகிறதும், ஹஜ்ஜுமாதம் எழாம்நாள் மக்கத்தில் லுஹர் தொழுதபின் இமாம் குதுபாஓதுகிறதும், எட்டாம் நாள் சூரியன் உதயமானபின் மினா பஜாருக்கு போகிறதும், மினாவில் இராதரிக்கிறதும், ஒன்பதாம்நாள் சூரியன் உதயமானபின் மினாவிலிருந்து அரபாவுக்கு போகிறதும், அரபாவில் மதியத்துக்குபின் லுஹருக்கு இமாம் குதுபாஓதுகிறதும், அதில் லுஹரையும் அசரையும்

ஒன்றுய் சேர்த்து தொழுதபின் ஜனங்களெல்லாம் தரிபடுகிற மூபிக் என்னும் தானத்திற்கு போய் பாவத்தை நினைத்து மனம்நொந்து கண்ணீர் விட்டழுகிறதும், தனக்கும் தன் தாய் தகப்பனுக்கும் மற்றும் மூமீன்களுக்கும் இருபதியுடைய நலவான காரியத்தில் தான் நாடியதெல்லாம் துஆகேட்கிறதும், பொழுதுஅஸ்தமித்தபின் ஒடுங்குதலுடனே அரப்பாவை விட்டு புறப்பட்டு முஸ்தலிபாவுக்கு வருகிறதும், அவ்விடத்தில் இராதரிக்கிறதும், மீனுவில் தரிப்படும் நாட்களில் அவன் சாமான்களுடனே இராதரிக்கிறதும்,ஹஜ்ஜைக் கொண்டு மாத்திரம் இஹ்ராம் கட்டினவன் குருபான் கொடுக்கிறதும், அதில்நின்றும் மற்றும் முஸ்தஹப்பான வாஜிபான குருபானில் நின்றும் கொஞ்சம் தின்னுகிறதும், நஹ்ருடைய நாளில் குதுபா ஓதுகிறதும், மீனுவிலிருந்து போனவுடன் ஒரு சாஅத்தாவது மக்கத்துடைய முத்தவெளியில் தரிக்கிறதும், சம்சம் கிணற்றின் தண்ணீர் குடிக்கிறதும், அத்தண்ணீரை வயிறு நிரம்ப விலாக்குடைய எலும்பு எழும்பும்படி குடிக்கிறதும், குடிக்கும்போது பைத்துல்லாவை முன் நோக்கி நின்று பார்க்கிறதும், அந்தத் தண்ணீரை தலையின் பேரிலும் சரீரத்தின் பேரிலும் தெளிக்கிறதும், ஹஜ்ஜுருல் அஸ்வதுக்கும் கஃபா வாசலுக்கும் மிடையிலுள்ள முல்தஸீமாவில் நெஞ்சையும் முகத்தையும் அதன்பேரில் வைத்து கஃபாவின் திரையை பிடித்து கஃபாவைக் கொண்டு மன்றுடுகிறவன்போல் கொலுவுகிறதும், அப்போது மிகு சஞ்சலத்துடன் தக்பீர் தஹ்லீல் சலவாத்து சொல்லி துஆ கேட்கிறதும், கஃபாவுடையவாசலை முத்தமிடுகிறதும், பள்ளியைவிட்டும் புறப்பட்டு வரும்போது பைத்துல்லாவை கடைக்கண் கொண்டு பார்த்தவனுக பிரைக்காட்டி அழுதுக்கொண்டு மீளுகிறது.

## ஹஜ்ஜுல் அக்பர்.

ஹஜ்ஜுல் அக்பாகிறது துல்ஹஜ்ஜு மாதம்ஒன்பதாம் நாளாகிய அரப்பா அன்று வெள்ளிக்கிழமை வந்தால் அவ்வருடத்தின் ஹஜ்ஜுக்கு ஹஜ்ஜுல் அக்பர் என்று சொல்லப்படும். அவ்வருடத்தின் ஹஜ்ஜாகிறது மற்றும் எழுபது ஹஜ்ஜைக்காண யேற்றமாயிருக்குமென்று ஹதீஸில் வருகின்றன.

## உம்ராவின் விபரம்.

உம்ராவாகிறது சுன்னத்து முஅக்கதாவாயிருக்கும். அதன் ஒழுங்காவது உம்ராவை நிறைவேற்ற நாடினவன் குளித்து ஹஜ்ஜில் உடு

த்துவதுபோல் இஹ்ராம் உடுப்பு உடுத்திக்கொண்டு மக்கத்தை விட்டும் உம்ராவின் மீக்காத்து மூன்று இடமுண்டாயிருக்கும் அங்கு போய் உம்ராவுடைய நிய்யத்து செய்து அல்லாஹும்ம இன்னீஉரீதுல் உம்ராவை சொல்லி தல்பியாவும் ஓதி ஆயிஷாவும்மாவுடைய பள்ளிக்கு போய் இரண்டு ரக்காத்து தொழுது மற்ற காரியங்களையும் செய்து முடித்து தலைமுடி யிரக்கவும். இனி உம்ராவாகிறது வருடம் அடங்கலும் ஆகும். அரபாநாளும் அதற்குபின் நான்கு நாளும் மக்ரூஹு.

## உலுஹியத்தின் விவரம்.

உலுஹியாவாகிறது ஹஜ்ஜு பெருநாளையில் பித்ராவாஜிபாகிய சீமான் தனமுள்ள முகீமாகிய முஸ்லீமான நாட்டாமகன் பேரில் துல்ஹஜ்ஜுபத்தாவது நாள்கிழக்கு வெளுத்தபின்பு அந்தஉலுஹியா வாஜிபு. இனி முஸ்லீமானவன் தன்னைத் தொட்டும் தன் சிறு குழந்தையைத் தொட்டும் ஆள் ஒன்றுக்கு ஒரு கிடாவீதம் அறுத்துக் கொடுக்கவேண்டும். ஒரு சொல்படி அவனுக்கு மாத்திரம் ஒருகிடா அறுத்துக் கொடுத்தால் போது மென்றும் வந்திருக்கிறது. பின் உலுஹீயா மூன்று நாள் வரை கொடுக்கலாம். இனி உலுஹியாவுடைய கிடாயாகிறது பெரும் கொம்புள்ளதாகவும் உறுப்புகளில் குற்றம் குறை இல்லாத்ததாகவும் கண் விஸ்தீரணமானதாகவும் அழகானதாகவும் பெரிதானதாகவும் கொழுத்ததாகவும் தெரிந்தெடுத்து கொடுக்கவேண்டும்.



# பாபுன் பீ ஸியாரதிர் ரௌஸது ஷரீபது ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம்.

## நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லமுடைய ரவுஸாஷரீபை ஸியாரத்து செய்கிறதில் பேசும் பாடம்.

துற்றுல் முக்தார் என்னும் கிதாபில் வருகிறது மக்கமாகிறது மதீனத்தைக்காண ரொம்ப வரிசையாயிருக்கும், ஆனால் நபிஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களின் சங்கையாகிய உருப்புகளை பொதிந்திருக்கிற கபுருஷரீபாகிறது மக்கம் கஃபா அர்ஷ் குரிஸி இவைகளடங்கலைக்காண ரொம்ப வரிசையாயிருக்கும். அதை ஸியாரத்து செய்வது முஸ்தஹப்பாயிருக்கும். எங்கிலும் விஸ்தீரணமுள்ளவனுக்கு வாஜிபாயிருக்கும் (ஹதீது) யாதொருவன் என்னுடைய வபாத்துக்கு பின் என் கபுரை ஸியாரத்து செய்வானாகில் நான் ஹயாத்தாயிருக்கும்போது என்னைவந்து கண்டது போலாயிருக்கும் என்

றும், யாராவது ஒருவன் என் கபுரை ஸியாரத்து செய்தால் என்னுடைய ஷபாஅத்து அவனுக்கு வாஜிபாகிவிட்டது என்றும், யாதொருவன் என்னை வந்து காண திராணி பெற்றபின் என்னை ஸியாரத்து செய்யவில்லையானல் திடனுக என்னை வெருத்திட்டானென்றும், யாதொருவன் பைத்துல்லாவை ஹஜ்ஜுசெய்துஎன்னைஸியாரத்து செய்யவில்லையானல் திடனுக என்னை வெருத்திட்டானென்றும் ஒருவன் பைத்துல்லாவை ஹஜ்ஜு செய்து என்னுடைய கப்ரை ஸியாரத்து செய்யவில்லையானல் திடனுக என்னை வெறுத்திட்டானென்றும், ஒருவன் ஹஜ்ஜு செய்து பின்பு என்னுடைய ரவுளாவில் வந்து என்னை நாடினல் அவனுக்கு மக்பூலான இரண்டு ஹஜ்ஜு எழுதப்படுமென்றும், ஒருவன் யாதொன்றையும் நாடாமல் என்னை ஸியாரத்து செய்கிறதையே நாடினவனுக என்னிடத்தில் வந்தால் அவனுக்கு நான் மன்ருடுகிறவனுயிருக்கிறது. அல்லாஹுத்தாலாவின்பேரில் ஹக்காகிவிட்டதென்றும் இருஜஹானுக்கும் நாயகமாகிய அஜரத்முஹம்மத்முஸ்தபா சல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் திருவுளம்பற்றினுர்கள். (பாய்தா) நபிசல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் ஹயாத்தானவர்கள் அவர்களுக்கு ரிஸ்க்கு கொடுக்கப்படுகிறது. அவர்கள் லஸ்ஸத்துகள் இபாதத்துகள் அடங்கலைக் கொண்டும் பிரயோஜனம் பெறுகிருர்கள். எங்கிலும் சிறப்பாகிய மகாமை யெத்துவதை விட்டு சுருங்கினவர்களுடைய பார்வைகளைவிட்டு அவர்களை திரை போடப்பட்டது என்கிறது முஹக்கிகீன்களிடத்தில் தரிபட்டதாயிருக்கிறது, ஆனபோதே ஒலிமார்களாகிறது ஷுஹதாக்களுடைய தானத்தைக் கொண்டாயிருக்குமென்றும் அவர்கள் மௌத்தாக மாட்டார்கள் என்கிலும் தாருல் பனுவை விட்டும் தாருல்பகா அளவில் திரும்புகிருர்கள்ளென்று திடனுக வந்திருக்க எப்படி நபிசல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் எவ்விதமாக ஆயிருக்கமாட்டார்கள்.

## ஈமான் ஸலாமத்தாகிறதற்காக வேண்டி ஓதுகிற துஆ.

லாஇலாஹ இல்லல்லாஹுல் மவ்ஜூது பிகுல்லி ஸமானின்
லாஇலாஹ இல்லல்லாஹுல் மஃறூபு பிகுல்லி இஹ்ஸானின்
லாஇலாஹ இல்லல்லாஹுல் மஃபூது பிகுல்லி மகானின்
லாஇலாஹ இல்லல்லாஹுல் மஸ்கூரி பிகுல்லி லிஸானின்
லாஇலாஹ இல்லல்லாஹு பிகுல்லியவ்மின் ஹுவ பீஷஃனின்
லாஇலாஹ இல்லல்லாஹுல் அமான மின் ஸவாலில்ஈமானிவமின்
ஷற்றிஷ் ஷைத்தானி வஹுல்மிஸ் சுல்தானி யாகதீமுல் எஹ்சானி யாகபூறு யாகப்பாறு பிறஹ்மதிக யாஅற்ஹமர்றுஹிமீன்.

அஹ்காமுல் முஸ்லிமீன் ஹனபீ முற்றுப்பெற்றது.





பிஸ்மில்லா ஹிர்றஹ்மா நிர்றஹீம்.

# தக்மிலா அஹ்காமுல் முஸ்லிமீன்.

## ஹனபீ.

### அவ்வல் கலிமா தய்யிப்.

லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் றசூலுல்லாஹீ.

### இரண்டாம் கலிமா ஷஹாதத்து.

அஷ்ஹது அன் லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வறசூலுஹு.

### மூன்றும் கலிமா தம்ஜீது.

சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர். வலாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹில் அலிய்யில் அலீம்,

### நாலாம் கலிமா தவ்ஹீது.

லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீது பியதிஹில்கைற். வஹுவ அலாகுல்லி ஷைஇன் கதீற்.

### ஐந்தாம் கலிமா றத்தகுபிற்.

அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மின்அன்உஷ்றிக பிகஷை அன் வஅனஅஃலமு வஅஸ்தக்பிருக லிமாலா அஃலமு இன்னக அந்த அல்லாமுல் குயூபு துப்து அன்ஹு வதபற்றஃது அன்குல்லி தீனின் ஸிவா தீனில் இஸ்லாமி வஅஸ்லம்து வஅகூலு லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் றசூலுல்லாஹீ.

### ஈமான் முஜ்மல்

ஆமந்து பில்லாஹி கமாஹுவ பிஅஸ்மாஇஹி வஸிபாதிஹி வகபில்து ஜமீஅ அஹ்காமிஹி வஅஹ்காமிறசூலிஹி.

### ஈமான் முபஸ்ஸல்

ஆமந்து பில்லாஹி வமலாஇகதிஹி வகுதுபிஹி வருசுலிஹி வல்யவ்மில் ஆகிறி வல்கத்ரி கைரிஹி வஷர்றிஹி மினல்லாஹி தஆலா வல்பஃஸி பஃதல்மவ்தி.

## இஸ்லாமின் எடுப்புகள்

புனியல் இஸ்லாமு அலாகம்ஸின் ஷஹாததி அன்லாஇலாஹ இல்லல்லாஹு வஅன்ன முஹம்மதர் றசூலுல்லாஹி வஇகா முஸ்ஸலாத்தி வஇதாஉஸ்ஸகாதி வஸவ்மு றம்லான வஹஜ்ஜுல் பைதி மனிஸ்ததாஅ இலைஹி ஸபீலா.

## இஸ்திக்பார்

அஸ்தக்பிருல்லாஹி றப்பீ மின்குல்லி ஸன்பின் வகதீஅதின் வஅதூபு இலைஹி,

## ஸலவாத்து

அல்லாஹும்ம ஸல்லி வஸல்லிம் அலா ஸய்யிதினா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் அதத மாபீ இல்மில்லாஹீ ஸலாதன் தாஇமதன் பிதவாமி முல்கில்லாஹீ.

## கலாவில் புகுதும்போது ஓதுகிற துஆ

பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் குபுஸி வல்கபாஇஸி.

## கலாவை துப்புறவு செய்தபின் ஓதுகிற துஆ

அல்ஹம்து லில்லாஹீ அல்லாஹும்ம ஹஸ்ஸின் பறஜி வயஸ்ஸிற் அம்ரீ.

## ஒழுவுடைய நிய்யத்து

அதவல்லஊ பிறப்இல் ஹதஸி வஸ்திபாஹதஸ்ஸலாத்தி இம்திஸாலன் லிஅம்ரில்லாஹி தஆலா.

## ஒழு குஸ்லுக்கு பின் ஓதுகிற துஆ

அல்லாஹும்மஜ் அல்னீ மினத்தவ்வாபீன வஜ்அல்னீ மினல் முத்த தஹ்ஹிரீனல்லஸீன லாகவ்புன் அலைஹிம் வலாஹும் யஹ்ஸனூன். சுப்ஹானக அல்லாஹும்ம வபிஹம்திக அன்லாஇலாஹ இல்லா அந்த வஹ்தக லாஷரீக்கலக அஸ்தக்பிருக வஅதூபு இலைக வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துக வறசூலுக. (என்று கிப்லாவை முன்னோக்கி ஓதுகிறது.)

## ஜுனுபத்து முழுக்கு நிய்யத்து

நவய்து அன்அக்தஸில குஸ்லன் மினல் ஜனுபதி வதஹாறதன் லிப்பதனி வஸ்திபாஹதன் லிஸ்ஸலாத்தி அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதற் றசூலுல்லாஹி.

## ளுஹறுலு முளுக்கு நிய்யத்து

நவைத்து அன் அக்தஸில குஸ்லன் மினல் ஷைறலி வதஹாற தன்லில் பதனி வஸ்த்திபாஹதன் லிஸ்ஸலாத்தி அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் றசூலுல் லாஹி.

## பிள்ளைத் தொடக்கு முளுக்கு நிய்யத்து

நவைத்து அன்அக்தஸிலகுஸ்லன்:மினன் னிபாஸிவதஹாறதன் லில்பதனி வஸ்திபாஹதன் லிஸ்ஸலாத்தி அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதர் றசூலுல்லாஹி.

## ஜும்ஆ முளுக்கு நிய்யத்து

நவைத்து அன் அக்தஸில குஸ்லல் ஜும்அதி வன்னலாபதி.

## நோன்பு பெருநாள் முளுக்கு நிய்யத்து

நவைத்து அன் அக்தஸில குஸ்லுல் ஈதில் பித்தறி.

## ஹஜ்ஜு பெருநாள் முளுக்கு நிய்யத்து

நவைத்து அன் அக்தஸில குஸ்லுல் ஈதுல் அல்ஹா.

## தயம்மம் செய்கிற நிய்யத்து

அதயம்மமு லிறப்இல் ஹதஸி வஸ்த்திபாஹதன் லிஸ்ஸலாத்தி

## பாங்குடைய கலிமாக்கள்

(அல்லாஹு அக்பற் அல்லாஹு அக்பற் அல்லாஹு அக்பற் அல்லாஹு அக்பற், அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ் அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல்லாஹ். அஷ்ஹது அன்ன முஹம்மதர் றசூலுல்லாஹ் அஷ்ஹது அன்ன முஹம்மதர் றசூலுல்லாஹ் ஹய்ய அலஸ்ஸலாத் ஹய்ய அலஸ்ஸலாத். ஹய்ய அலல்பலாஹ் ஹய்ய அலல்பலாஹ். அல்லாஹு அக்பற் அல்லாஹு அக்பற் லாயிலாஹ இல்லல்லாஹ்) ஆனால் சுப்ஹுடைய பாங்கில் (ஹய்ய அலல் பலா) ஹுக்குபின் (அஸ்ஸலாத்து கைருன் மினன்னவ்ம்) என்று இரண்டு தரம் சொல்லவும்.

## இகாமத்துடைய கலிமாக்கள்

அல்லாஹு அக்பற் அல்லாஹு அக்பற் அஷ்ஹது அன்லாயி லாஹ இல்லல்லாஹ் அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹ் அஷ் ஹது அன்ன முஹம்மதர் றசூலுல்லா அஷ்ஹது அன்ன முஹம்மதர்

றசூலுல்லாஹ் ஹய்ய அலஸ்ஸலாத் ஹய்ய அலஸ்ஸலாத் ஹய்யஅலல் பலாஹ் ஹய்ய அலல்பலாஹ் கத்காமதிஸ்ஸலாத் கத்காமதிஸ்ஸலாத் அல்லாஹு அக்பற்அல்லாஹு அக்பற் லாயிலாஹ இல்லல்லாஹ்.

## பாங்குக்கும் இகாமத்துக்கும் ஜவாபு சொல்லுகிறது

அஷ்ஹது அன்ன முஹம்மதர் றசூலுல்லா என்று முதலாவது விடுத்தம் சொல்லும்போது ஸல்லல்லாஹு அலேக்க யாறசூலல் லாஹி என்றும் அதை இரண்டாவது விடுத்தம் சொல்லும்போது கை பெருவிரலின்இரண்டு நகத்தையும் முத்தமிட்டு இருகண்ணின் பேரில் வைத்து குற்றத ஐனீபிக யாறசூலல்லாஹி அல்லாஹும்மபத்திஃனீ பிஸ்ஸம்இ வல்பஸறி என்றும் ஹய்ய அலஸ்ஸலாத்தி என்று சொல் லும்போது லாஹவல வலா குவ்வத இல்லா பில்லாஹி என்றும் ஹய்ய அலல்பலாஹ் என்று சொல்லும்போது மாஷா அல்லாஹு கான வமாலம் யஷஃ லம்யகுன் என்றும் பஜ்ரில் அஸ்ஸலாத்து கைருன் மினன்னவும் என்று சொல்லும்போது ஸதக்த வபரிற்த்த வபில்ஹக்கி நதக்த என்றும் ஜவாபுசொல்லவேண்டியது பாங்குடைய ஜவாபைபோல் இகாமத்துக்கும் ஜவாபு சொல்லுகிறது முஸ்தஹப்பு. ஆனல் கத்காமதிஸ்ஸலாத்துக்கு ஜவாபு சொன்னுலுஞ்சரி. சொல்லா விட்டாலும் சரி.

## பாங்குடைய துஆ.

அல்லாஹும்ம றப்ப ஹாஸிஹித் தஃவதித்தாம்மதி வஸ்ஸலா த்தில் காஇமதி ஆதி செய்யிதினு முஹம்மதனில் வஸீலத வல்பழீ லத வத்தறஜதர் றபீஅதல் ஆலியதஷ்ஷரீபத வப்அஸ்ஹு மகாமன் மஹ்மூதா னில்லஸீ வஅத்தஹு வற்ஸுக்னு ஷபாஅதஹு வஅவ் ரித்னு ஹவ்லஹு யவ்மல்கியாமா. இன்னக லாதுக்லிபுல் மீஆத். பிற ஹ்மதிக யாஅற்ஹ மர்றுஹிமீன்.

## சுப்ஹு தொழுகைகளின் நிய்யத்து.

(சுன்னத்து) நவைத்து அன் உஸல்லிய லில்லாஹி தஆலா றக அதைனி சுன்னத்தல் பஜ்ரி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பற்.

(பற்லு) நவைத்து அன்உஸல்லிய லில்லாஹிதஆலாறகஅதைனி பற்ழ ஹாஸல்பஜ்ரி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ்ஷரீபதி அல்லாஹு அக்பற்.

## ளுஹறு தொழுகைகளின் நிய்யத்து

(முந்தின சுன்னத்து) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா அற்பஅ றகஆதின் சுன்னதன் கப்லல்ளுஹ்ரி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ்ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

(பர்ளு) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா அற்பஅ றகஆதின் பறல ஹாஸல் ளுஹ்ரி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

(பிந்தின சுன்னத்து) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா றகஅதைனி சுன்னதன் பஃதல் ளுஹரி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

## அஸர் தொழுகைகளின் நிய்யத்து

(சுன்னத்து) நவைத்து அன்உஸல்லியவில்லாஹிதஆலாஅற்பஅ றகஆதின் சுன்னதல் அஸரி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

(பர்ளு) நவைத்து அன் உஸல்லிய வில்லாஹி தஆலா அற்பஅ றகஆதின் பற்லஹாஸல் அஸ்றி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

## மக்ரிபு தொழுகைகளின் நிய்யத்து

(பர்ளு) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா ஸலாஸா றகஆதின் பற்ல ஹாஸல் மக்ரிபி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

(சுன்னத்து) நவைத்து அன் உஸல்லிய வில்லாஹி தஆலா றகஅதைனி சுன்னதல் மக்ரிபி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ்ஷரீபதிஅல்லாஹுஅக்பர்.

## இஷா தொழுகைகளின் நிய்யத்து

(முந்தின சுன்னத்து) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா அற்பஅ றகஆதின் சுன்னதன் கப்லல் இஷாஇ முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

(பர்ளு) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா அற்பஅ றகஆதின் பற்ல ஹாஸில் இஷாஇ முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹுஅக்பர்.

(பிந்தின சுன்னத்து) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா றகஅதைனி சுன்னத பஃதல் இஷாஇ முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

## வித்ருத் தொழுகையின் நிய்யத்து.

நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா ஸலாஸா றகஆதின் வித்ர ஹாஸல்லைலி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

## ஜும்ஆ தொழுகைகளின் நிய்யத்து.

(முந்தின சுன்னத்து) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா அர்பஅ றகஆதின் சுன்னதன் கப்லல் ஜும்அதி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

(பர்லு) நவைத்து அன்உஸ்கித ஸலாத பர்ல ஹாஸல் லுஹ்றி அன் வஸிம்மதீ பிஅதாஇ ஸலாதில் ஜும்அதி வில்லாஹி தஆலா இக்ததைது பிஹாஸல் இமாமி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

(பிந்தின சுன்னத்து) நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா அர்பஅ றகஆதின் சுன்னத பஃதல் ஜும்அதி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

## இஷ்றாக் தொழுகைகளின நிய்யத்து.

நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா றகஅதைனிஸலாதல் இஷ்றாகி முதவஜ்ஜிஹன் இலா ஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

## லுஹா தொழுகையின் நிய்யத்து.

நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா றகஅதைனி ஸலாதில்லுஹா முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

## தஹிய்யத்து தொழுகையின் நிய்யத்து.

நவைத்து அன்உஸல்லிய வில்லாஹி தஆலா றகஅதைனி ஸலாதத் தஹிய்யதி முதவஜ்ஜிஹன் இலாஜிஹதில் கஃபதிஷ் ஷரீபதி அல்லாஹு அக்பர்.

